For private circulation only

Book Post

www.tchsportal.co.in

# கிறிஸ்தவ வரலாற்றுச் சுவடுகள்

விலை : ரூ 60

திசை தெரியாமல் திகைக்காதிருக்க திருச்சபை வரலாறு தெரியவேண்டும்

ஜனவரி 2022 • இதழ் 20



கிறிஸ்தவ

# வரலாற்றுச் சுவடுகள்

மாத ஆய்விதழ் சந்தா விபரம்

| சந்தா விபரம் | உள்நாடு |
|---|---|
| தனிப்பிரதி | ₹ 60 + நன்கொடை |
| ஆண்டு சந்தா | ₹ 600 + நன்கொடை |
| ஐந்து ஆண்டு சந்தா | ₹ 3000 + நன்கொடை |

**"கிறிஸ்தவ வரலாற்றுச் சுவடுகள்" மாத ஆய்விதழை நீங்கள் தொடர்ந்து பெற்றுக் கொள்ள G-Pay மூலம் நன்கொடை செலுத்த 91767 80001 என்ற எண்ணுக்கு செலுத்தவும் காசோலை மற்றும் வரைவோலை செலுத்த 'திருநெல்வேலி கிறிஸ்தவ வரலாற்றுச் சங்கம்' ( Tinnevelly Christian Historical Society ) என்ற பெயரில் எடுக்கவும்**

**சந்தாவை வங்கி கணக்கில் செலுத்த**

**Bank :- Federal Bank**
**Name :- Tinnevelly Christian Historical Society**
**Account number :- 1748 0200 0036 84**
**IFSC Code :- FDRL0001748**




**கிறிஸ்தவ வரலாற்றுச் சுவடுகள்,**
**கதவு எண் 2-2-3(4), வடக்குத்தெரு,**
**பங்களாச் சுரண்டை-627859,**
**தென்காசி மாவட்டம் (தமிழ்நாடு)**
04633 290401

**வடிவமைப்பு**
**சுஜித் ரெக்ஸ்**
75388 12218

**பதிப்பாசிரியர்**
**மன்னா செல்வகுமார்**
91767 80001

christianhistorical@gmail.com
https://christianhistoricalsociety.in


# ஆசிரியர் சுவடு

கிறிஸ்துவுக்குள் அன்பான திருச்சபை வரலாற்று பிரியர்களே,

ஆண்டவரும் இரட்சகருமாகிய இயேசு கிறிஸ்துவின் இனிதான நாமத்தினாலே உங்கள் அனைவருக்கும் புத்தாண்டு வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்ளுகின்றேன்.

இறைவனின் கிருபையினால் நம் திருநெல்வேலி வரலாற்று சங்கமானது பல தடைகளையும், தேவைகளையும் தாண்டி அநேக வாசகர்களைக் கொண்ட சங்கமாக வளர்ந்து வருகின்றது. ஒவ்வொரு மாதமும் வெளிவரும் மாதாந்திர பத்திரிக்கையானது தமிழகத்தின் பல பகுதிகளில் மறைந்து கிடந்த வரலாற்றினை வெளிக்கொண்டு வருகின்ற பணியினை செய்து வருகின்றது. இம்மாத இதழிலே நம் பகுதிகளில் இயேசுவை அறிமுகப்படுத்திய மிஷனெரிகள், ஊழியத்திற்கு மத்தியிலே தமிழ் மொழியின் மீது கொண்ட ஆர்வத்தினால் பல நூல்களை எழுதினார்கள். அவ்வாறு மிஷனெரிகள் படைத்த இலக்கியங்களின் சிறப்பிதழாக இது உங்கள் கரங்களை அடைந்திருக்கின்றது.

பிப்ரவரி மாதத்திற்கான தலைப்பாக "திருச்சபை வளர்ச்சியில் இந்திய பெண்களின் பங்கு" என்ற தலைப்பில் ஆய்வு கட்டுரைகள், துணுக்குகள், இலக்கிய படைப்புகளின் நூல் மதிப்புரை ஆகியவை வரவேற்கப்படுகின்றன. எழுத்தார்வம் உடையவர்கள் படைப்புகளை ஜனவரி மாதம் 25 தேதிக்குள்ளாக அனுப்பித்தர கேட்டுக்கொள்ளுகின்றோம். வரலாற்றுச் சுவடுகள் ஆய்விதழை நண்பர்களுக்கு அறிமுகப்படுத்த அன்போடு கூட கேட்டுக் கொள்ளுகின்றோம். ஒவ்வொரு மாதமும் அதிக பணசெலவுகள் உண்டு, சந்தா, நன்கொடை மூலமாகவும் இவ்வூழியத்தினை தாங்க அன்போடு கூட கேட்டுக் கொள்ளுகின்றோம்.

மற்றொரு புதிய ஆண்டை காணும்படியான பாக்கியத்தைக் கர்த்தர் தந்திருக்கின்றார். இவ்வாண்டிலே கர்த்தர் பாதுகாப்பினையும், ஆசீர்வாதத்தினையும் உங்களுக்கு அருளி உங்கள் யாவரையும் ஆசீர்வதிப்பாராக.

கிறிஸ்தவ வரலாற்று பணியில்..

மன்னா செல்வகுமார்
பதிப்பாசிரியர்





# தமிழ் நாட்டார் போற்றும் அறிஞர் ஜி. யு. போப்

கட்டுரை: சுஜித்

போப்பையர் என்று தமிழ் நாட்டார் போற்றும் அறிஞர் பத்தொன்பதாம் வயதில் தமிழ் நாட்டில் கிறிஸ்தவப் பணி செய்ய வந்தார். அறுபதாண்டளவும் தமிழகத்தில் அரும்பணி ஆற்றினார். பின்பு சீமைக்குச் சென்று ஆக்ஸ்போர்டு சர்வ கலாசாலையில் தமிழ், தெலுங்கு ஆகிய இருமொழிக்கும் ஆசிரியராக அமர்ந்து, இருபது ஆண்டுகளுக்கு மேலாகத் தமிழ்த் தொண்டு செய்தார். சுருங்கச் சொல்லின், இவர் மேலை நாட்டார்க்குத் தமிழகத்தின் கலைச் செல்வத்தைக் காட்டினார். நீதியின் நீர்மையை உணர்த்தினார். ஞானச் செல்வத்தை வழங்கினார். தமிழ்ப்பணியே தம் உயிர்ப்பணியாகக் கொண்டார் என்னலாம்.

இத்தகைய பெரியாரது தமிழ்த் தொண்டு நெல்லை மாவட்டத்தில் தொடங்கிற்று. அம்மாவட்டத்தில் சாயர்புரம் (தற்போதைய தூத்துக்குடி) என்னும் ஊர் ஒன்று உண்டு. அது கிறிஸ்தவர்கள் நிறைந்த சிற்றூர். அங்கே கிறிஸ்து மத போதகராகச் சென்றார் போப்பையர்; அவ்வூரில் உள்ள சிறுவர்களின் அறிவை வளர்ப்பதற்கு ஒரு கல்லூரி அமைத்தார்; சிறந்த ஆசிரியர்களைப் பாடம் சொல்ல நியமித்தார். எல்லாக் கலைகளும் அங்கே போதிக்கப்பட்டன. பள்ளிப் பிள்ளைகள் தினந்தோறும் படிக்க வேண்டிய பாடங்கள் தமிழ், லத்தீன், கிரீக்கு, கிபுரு; அதற்கு மேல் கணிதம், தர்க்கம், தத்துவம். இவற்றைப் போதிப்பதற்குப் பகற் பொழுது போதாமையால் இரவிலும் நெடுநேரம் பாடம் நடைபெற்றது. சாயர்புரக் கல்லூரி ஒரு சர்வகலாசாலையாக விளங்குதல் வேண்டும் என்பது போப்பையரின் ஆசை. தம் இளங்குழந்தைகள் இனிது வளர வேண்டும் என்ற ஆசையால் அளவுக்கு அதிகமாக உணவையூட்டி வயிற்று நோயை வரவழைக்கும் தாயாரைப்போல் பள்ளிப் பிள்ளைகளின் அறிவை வளர்க்கக் கருதிய போப்பையர் கடினமான பாடங்களைச் சுமத்தி மலைப்பையும், திகைப்பையும் உண்டாக்கினார். மாணவர்கள் ஒருவர் பின்னே ஒருவராய் நழுவத் தொடங்கினர். ஐயரும் ஊக்கம் இழந்து, உடல் நலம் குன்றி ஆங்கில நாட்டுக்கு இளைப்பாறச் சென்றார்.

இரண்டு ஆண்டுகள் இளைப்பாறி மீண்டும் இவர் தமிழ் நாட்டுக்குப் பணி செய்ய வந்தார். தஞ்சாவூரிலும், நீலகிரியிலுள்ள உதகமண்டலத்திலும், மைசூர் தேசத்தில் உள்ள பெங்களூரிலும் பல்லாண்டுகளாகச் சிறந்த தொண்டு புரிந்தார். நீலகிரியிலுள்ள 'ஊட்டி'யில் போப்பையர் பத்தாண்டு பாடசாலை யொன்று நடத்தினார். அப்பொழுது அம்மலையில் வாழும் தோடர் என்ற இனத்தாரோடு இவர் நெருங்கிப் பழக நேர்ந்தது. தோடர் பேசும் மொழியில் பாட்டும் இல்லை. வசனமும் இல்லை. எருமை மாடு மேய்ப்பதே அவர்கள் தொழில். அன்னார் குடியிருக்கும் ஊருக்கு மந்து என்பது பெயர். கோடையிலே இளைப்பாற்றிக் கொள்ளும் பொருட்டுச் சென்னை அரசாங்கத்தாரும் செல்வரும் சென்றடைகின்ற **'ஒத்தக்க மந்து'** என்ற ஊரின் பெயரில் அச்சொல்லைக் காணலாம். ஒத்தைக்கல் மந்து என்று தோடரால் இடப்பட்ட பெயரே ஒட்டக்கமண்டாயிற்று என்று சிலர் கருதுகின்றார்கள். நீலகிரித் தோடர் பேசும் மொழியைப் போப்பையர் ஆராய்ந்து அதன் இலக்கணத்தை எழுதியுள்ளார்.

தமிழ் மொழிக்கு ஐயர் செய்த தொண்டுகள் பலவாகும். தமிழில் அமைந்த அருமையான நீதி நூல்களை இவர் படிப்படியாகக் கற்றார். பள்ளிச் சிறுவர் முதலாகப் பரிபக்குவமடைந்த பெரியோர் ஈறாக எல்லோருக்கும் பயன்படத்தக்க முறையில், தமிழ் மொழியில் நீதி நூல்கள் அமைந்திருக்கக் கண்டு மனம் மகிழ்ந்தார். ஐந்து வயதில் பள்ளிக்குச் செல்லும் சிறுவர் 'அறஞ்செய விரும்பு', 'ஆறுவது சினம்' என்று பாடம் ஓதுகின்றார்கள். அறிவு வளர வளர நாலடியார், திருக்குறள் முதலியவற்றை நுணுகி நுணுகி ஆராய்கின்றார்கள். நீதி நூல் வகையில் தலை சிறந்த பெருமை தமிழ் நாட்டில் நாலடியாருக்கும் திருக்குறளுக்கும் உண்டு. 'ஆலும் வேலும் பல்லுக்குறுதி; நாலும் இரண்டும் சொல்லுக் குறுதி' என்பது இந்நாட்டுப் பழமொழி. நாலு என்பது நான்கு அடிகளில் அமைந்த நாலடியார்.

இரண்டு என்பது ஈரடிகளில் அமைந்த திருக்குறள். இவ்விரண்டு நீதி நூல்களிலும் அடங்கிய அறிவுச் செல்வத்தை ஆராய்ந்தறிந்தார் போப்பையர். அவற்றை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்துள்ளார்.

போப்பையர் காலத்திற்கு முன்னமே திருக்குறள் சில மொழிகளில் மொழி பெயர்க்கப்பட்டிருந்தது. வீரமாமுனிவர், திருக்குறளின் அறத்துப்பாலையும், பொருட்பாலையும் லத்தீன் மொழியில் மொழிபெயர்த்திருந்தார். ஜெர்மன் மொழியில் கிரால் என்பவர் திருக்குறளை முற்றும் மொழி பெயர்த்திருந்தார். பிரஞ்சு மொழியில் ஏரியல் என்பவரால் திருக்குறளின் ஒரு பாகம் மொழிபெயர்க்கப்பட்டிருந்தது. ஆங்கிலத்தில் அதனை மொழிபெயர்க்க முயன்றவர்கள் அரைகுறையாக விட்டுப் போயினர். எல்லீசர் என்னும் அறிஞர் பதின்மூன்று அதிகாரங்களின் சில பகுதிகளை மொழி பெயர்த்திருந்தார். துருவர் என்னும் ஆங்கிலப் பாதிரியார் அறுபத்து மூன்று அதிகாரங்களை மொழி பெயர்த்து விட்டு விட்டார். இந்த நிலையில் இருந்த திருக்குறளை முற்றும் ஆராய்ந்து, நன்றாக மொழி பெயர்த்து ஆங்கிலத்தில் வெளியிட்ட பெருமை போப்பையருக்கே உரியதாகும்.

அந்நூலை மொழி பெயர்க்கும் பொழுது கிறிஸ்துநாதர் அருளிய சில கருத்துக்களும், திருவள்ளுவர் கருத்துக்களும் ஒற்றுமையுடையனவாக இருக்கக்கண்டு இவர் உள்ளம் மகிழ்ந்தார். இவ்வகையில் போப்பையர் மனத்தைக் கவர்ந்த குறள்களில் இரண்டொன்றைப் பார்ப்போம்.

"ஒறுத்தார்க்(கு) ஒரு நாளை இன்பம் பொறுத்தார்க்குப்
பொன்றும் துணையும் புகழ்"

என்ற குறள் இவர் உள்ளத்தை அள்ளுவதாயிற்று. கிறிஸ்துநாதரது வாழ்க்கையின் சிறப்பினை எடுத்துக்காட்டுவதுபோல் தோன்றிற்று இப்பாட்டு. தீயவர் பலர் கிறிஸ்து நாதரைத் துன்புறுத்தினார்கள்; கழியால் அடித்தார்கள். அவர் மீது காறி உமிழ்ந்தார்கள். இவ்வாறு அவரை ஒறுத்த சிறியோர் ஒரு நாளை இன்பத்தையே பெற்றார்கள். ஆனால் அச்சிறுமையெல்லாம் பொறுத்திருந்த கிறிஸ்து நாதரோ உலகமுள்ளளவும் அழியாப்புகழ் பெற்றார். இவ்வுண்மையைக் குறட்பாவிலே கண்டு இன்புற்றார் போப்பையர். இன்னும் தீமை செய்தவர்க்கும் நன்மையே செய்தல் வேண்டும் என்பது திருவள்ளுவர் கொள்கை. 'இன்னா செய்தாரை ஒறுத்தல் அவர் நாண, நன்னயம் செய்துவிடல்' என்பது வள்ளுவர் வாக்கு. கிறிஸ்து நாதரைப் பகைவர்கள் சிலுவையில் அறைந்த பொழுது அவர் பேசிய வாசகத்தின் பொருளும், வள்ளுவர் குறளின் பொருளும் ஒன்றுபட்டிருக்கக் கண்டார் போப்பையர். தம் கையிலும் காலிலும் இருப்பாணி அறைந்து பொறுக்க முடியாத துயரம் விளைத்த பகைவரைக் கிறிஸ்துநாதர் வெறுத்தாரல்லர்; சபிக்க நினைத்தாரல்லர்; அக்கொடியாரிடம் இரக்கம் கொண்டார்; அவரை மன்னிக்கும்படி ஆண்டவனை வேண்டிக்கொண்டார். இது இன்னா செய்தார்க்கு நன்னயம் செய்தல் அன்றோ ?

இங்ஙனம் சிறந்த ஒற்றுமைகளைக் கண்ட போப்பையர் மனத்தில் ஒரு கருத்துத் தோன்றிற்று. திருமயிலாப்பூரில் வாழ்ந்த திருவள்ளுவர், அர்ச்தாமஸ் முதலிய கிறிஸ்தவ சீலர்கள் அங்குச் செய்த போதனையை அறிந்து இவ்வுண்மைகளை வெளியிட்டிருக்கலாம் என்னும் பொருள்பட இவர் எழுதியுள்ளார். இது அறிஞர் ஆராய்தற்குரியதாகும்.

இன்னும் போப்பையர் மாணிக்கவாசகர் இயற்றிய திருவாசகம் என்னும் அருள் நூலையும் ஆங்கிலத்தில் மொழி பெயர்த்தார். தமிழ்நாட்டில் திருவாசகத்திற்கு ஒரு தனிச்சிறப்பு உண்டு. படிப்போர் மனத்தை உருக்கிப் பக்தியை விளைவிக்கும் பான்மையில் ஒப்பற்ற நூல் திருவாசகம். 'திருவாசகத்திற்கு உருகாதார்



ஒரு வாசகத்திற்கும் உருகார்' என்பது இந்நாட்டில் நெடுமொழியாக வழங்குகின்றது. அந்நூலில் அடங்கிய அறுநூற்று ஐம்பத்தெட்டுப் பாடல்களையும் போப்பையர் ஆராய்ந்து அறிந்தார். ஆக்ஸ்போர்டு சர்வகலாசாலையில் ஆசிரியராக இருந்தபோது இவர் அந்நூலை ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கத் தொடங்கினார். அப்போது இவருக்கு வயது எழுபத்தேழு. எடுத்த வேலை முடியுமளவும் உயிர் இருக்குமோ என்ற ஐயம் இவர் உள்ளத்தில் எழுந்ததுண்டு.

ஒருநாள்மாலைப் பொழுதில்பால்நிலாஎங்கும்பரந்திருந்தது. கலாசாலைத் தலைவராகிய பெரியாரும் போப்பையரும் ஒரு நிலாமுற்றத்தில் இருந்து பேசிக்கொண்டிருந்தார்கள். அப்பெரியாரிடம் திருவாசகத்தின் பெருமையை எடுத்துரைத்தார் போப்பையர். இப்படிப்பட்ட புத்தகத்தை விரைவில் அச்சிட்டு வெளியிடல் வேண்டும், என்று அழுத்தமாகக் கூறினார் பெரியவர். அவரது ஆர்வத்தை அறிந்த போப்பையர், "ஐயனே, அவ்வேலை முடிவதற்கு நெடுங்காலம் செல்லுமே; நான் சாகாவரம் பெற்றிலேனே" என்றார். அது கேட்ட பெரியவர் போப்பையர் தோளைப் பற்றிக் கொண்டு, 'அறிஞரே! ஒரு பெரிய வேலையைத் தொடங்கி நடத்துவதுதான் நெடுங்காலம் வாழ்வதற்குரிய வழி. அவ்வேலை முடியுமளவும் உயிர் இருந்தே தீரும்' என்று உறுதியாகக்

> **'அறிஞரே! ஒரு பெரிய வேலையைத் தொடங்கி நடத்துவதுதான் நெடுங்காலம் வாழ்வதற்குரிய வழி. அவ்வேலை முடியுமளவும் உயிர் இருந்தே தீரும்'**

கூறினார். அவ்வாய்மொழியைப் போப்பையர் தாரக மொழியாகப் போற்றினார். தளர்வுற்ற பொழுதெல்லாம் அம்மொழியை நினைத்து ஊக்கமும் உறுதியும் பெற்றார். தமது எண்பதாவது பிறந்த நாளன்று திருவாசகத்தை அச்சிட்டு வெளிப்படுத்தினார். அப் பெரும்பணியை நிறைவேற்றியபோது இவர் மனம் சிறந்த இன்பம் அடைந்தது. தோன்றாத் துணையாக நின்று உதவிய இறைவன் கருணையை ஐயர் வாயார வாழ்த்தினார்; நேர்முகமாக நின்று ஆசியுரை கூறி ஊக்கப்படுத்திய கலாசாலைப் பெரியார் அம்மகிழ்ச்சியிற் கலந்து கொள்ளாது மாண்டுபோயினரே என்று மனம் வருந்தினார்.

போப்பையர் வெளியிட்ட திருவாசகத்தை அறிஞர் உலகம் ஏற்றுப் போற்றுவதாயிற்று. பாரிஸ் நகரத்தின் தேசியக் கலாசாலையில் பேராசிரியராக விளங்கிய சூலியன் வின்சன் என்பவர் ஒரு தமிழ்ப்பாட்டு இயற்றிப் போப்பையரைப் புகழ்ந்தார். **"இருவினை கடந்த செல்வன் இசைத்த வாசகத்தை யெல்லாம், வரு விளையாட்டாற் போலும் மறுமொழி யதனில் வைத்தீர்"** என்பது வின்சன் வாக்கு. தமிழ் நாட்டுப் புலவர்கள் ஐயர் திருவாசகத்தைப் பாட்டாலும் உரையாலும் பாராட்டினார்கள்.

இத்தகைய அரிய தமிழ் நூல்களை அச்சிட்டு வெளிப்படுத்தும் வகையில் மிகுந்த கைப்பொருளைச் செலவிட்டார் போப்பையர். அவற்றை ஆங்கில நாட்டார் அதிகமாக வாங்கி ஆதரிக்கமாட்டார் என்பது இவருக்கு நன்கு தெரியும். ஆயினும் தம் கைப்பொருளைச் செலவு செய்தேனும் தமிழ் நாட்டாருடைய கலைச் செல்வத்தையும், ஞானத்தையும் மேலைநாட்டாருக்குக் காட்டுதல் வேண்டும் என்பதே இவர் கருத்து. தமிழ்ப் புலமையே வறுமைக்கு நேரான வழி? என்று இவர் அடிக்கடி கூறுவதுண்டு. எனவே, பயன்கருதாது **தமிழ் மொழிக்குத் தொண்டுபுரிந்த பெருமக்களில் போப்பையரும் ஒருவர்** என்று கூறுதல் ஒரு சிறிதும் மிகையாகாது.

பழுத்த புலவராகிய போப்பையர் எண்பத்தாறாவது வயதை எட்டினார். அப்பொழுது ஆங்கில நாட்டுக் கலைஞர் சங்கம் இவரைப் பெருமைப்படுத்த முன்வந்தது. மாட்சிமை தங்கிய விக்டோரியா மகாராணியாருடைய வைர விழாவின் ஞாபகார்த்தமாக ஆங்கில நாட்டு **'ராயல் ஏஷியாட்டிக் சொசைட்டி'** என்ற சங்கத்தில் ஒரு தங்க மெடல் பரிசு ஏற்படுத்தியிருந்தார்கள். மூன்று ஆண்டுகளுக்கு ஒருமுறை அரசாங்கத்தார் தேர்ந்தெடுக்கும் அருங்கலைவாணர் ஒருவருக்கு அப்பரிசு வழங்கப்பட்டு வந்தது. ஆயிரத்துத் தொள்ளாயிரத்து ஆறாம் ஆண்டில் அப்பரிசு பெறுவதற்கு உரியவராகப் போப்பையர் தேர்ந்தெடுக்கப்பட்டார். அப்பொழுது இந்திய நாட்டு மந்திரியாக இருந்த சர். ஜான் மார்லி என்பவர் தலைமையில் ஒரு பாராட்டுச் சபை கூடிற்று. போப்பையர் தமிழுக்குச் செய்துள்ள அரும்பெருஞ் சேவைகளைத் தலைவர் புகழ்ந்து பேசித் தங்கப்பதக்கத்தைப் புலமைப் பரிசாக அளித்தார். பலர் அறிஞர் ஐயரைப் பாராட்டி ஆசி கூறினார்கள்.

அதற்கு அடுத்த ஆண்டில் போப்பையர் இவ்வுலகத்தை விட்டகன்றார். தமது கல்லறையில் 'போப்பையர் ஒரு தமிழ் மாணவர்' என்ற வாசகம் எழுதப்படல் வேண்டும் என்று இவர் ஆசைப்பட்டார். இவரது தமிழ் ஆர்வத்திற்கு இவ்விருப்பம் ஒன்றே போதிய சான்றாகுமன்றோ? எந்நாட்டிற் பிறந்தாலும், எந்நாட்டில் இறந்தாலும் போப்பையரைப் போன்றவர்கள் சிறந்த தமிழரே என்பதில் தடையும் உண்டோ ?






# மொழி, இலக்கியம், சுவிசேஷம்

## – ஒரு முப்பரிமாண சிந்தனையோட்டம்

**பிலிப் கே. மல்லி, மேனாள் ஆயர்,**
**கோத்தகிரி, நீலகிரி.**

'**எழுத்தறிவித்தோன் இறைவன் ஆவான்'** என்பது ஒரு தமிழ் முதுமொழி. இதன் பின்னணியை நாம் அறியமாட்டோம். ஆனால் தாங்கள் இறைவனின் இடைத்தரகர்கள் என்று எண்ணி வந்த அந்தணர், இறைமொழி என்று தனியாக ஒரு மொழியை (சமஸ்கிருதம் என்ற பெயரின் பொருளே, செப்பனிடப்பட்ட மொழிவழக்கு என்பதாகும்) தொல்காப்பியர் காலம் முதலே வளர்த்து வந்தனர். அம்மொழியை பாமரர்க்கு மறைத்து பரப்பி வந்ததால் அவர்கள் மறையோர் என்று அழைக்கப்பட்டனர். அவர்கள் ஓதிவந்த மந்திரங்கள் மறைநூல்கள் என்று அழைக்கப்பட்டன. சமய வரலாற்றில் இது அவ்வாறே ஊறிப்போய்விட்டது. இதனை நாம் உணராமல் இன்றைக்கு 'மறை' என்பதோடு 'திரு' என்ற அடைமொழி ஒன்றினை இணைத்துவிட்டால், கிறித்துவத் தமிழ் நடையில் அது ஒரு பெரிய சாதனை என்று தவறாக எண்ணிக்கொண்டிருகிறோம்.

ஆனால், நம்முடைய கிறித்துவப் பற்றுறுதி கோட்பாட்டுக்கு 'திருமறை' என்ற சொல் முற்றிலும் உகந்ததன்று என்று அறுதியிடப்படல் வேண்டும்.

புதிய ஏற்பாட்டில் எபிரெயருக்கு எழுதப்பட்ட திருமடலின் ஆரம்ப வசனங்கள் சொல்லுவதை நாம் நினைவு கூற வேண்டும். **நம்முடைய கடவுள் தம்மை மறைத்துக் கொண்டவர் அல்லர். அவர் கிறிஸ்து இயேசுவின் வழியாய் தம்மை முற்றிலும் வெளிப்படுத்தினவர் என்பதே நாம் அறிவிக்கும் நற்செய்தி.** அவர் இவ்வாறு மட்டுமே திருவுளம் பற்றினார் என்பதே சுவிசேஷம்.

எனவே 'திருமறை' என்ற சொல்லை நாம் தவிர்த்தல் சிறப்பாக இருக்கும். இறைவாக்கு என்பது உகந்ததாக இருக்கும். ஆனால் வேதாகமம் என்ற சொல் வாழையடி வாழையாக நம்முடைய சிந்தனையோட்டத்தில் பின்னிப் பிணைந்து நிற்கிறது. வடமொழியின் வாடை அந்த சொல்லில் இருக்கிறது என்பது மிகையல்ல. பரிசுத்த வேதாகமம் என்ற சொல்லில் 'பரிசுத்த' என்ற முன்னடையை நாம் ஆங்கிலத்திலிருந்து அப்படியே அப்பட்டமாகச் சேர்த்துக்கொண்டுள்ளோம். கன்னட மொழியில் புழங்கும் 'சத்தியாகமம்' என்பது ஒரு அருமையான சொல். 'திருவிவிலியம்' என்று நாம் சொல்லுவதிலும் தவறிருக்க வாய்ப்பில்லை.

ஆகவே, சத்திய வேதாகமத்தையும், சுவிசேஷத்தையும் மட்டுமே அறிவிக்க வந்த சுவிசேஷகர்கள், எந்தெந்த மொழிகளில் இந்த உன்னதமான பணியைத் துவக்கினார்களோ, அம்மொழிகளையும் ஏற்றமுறையில் செப்பனிட முயன்றனர்.

எந்தெந்த மொழிகள் மிகத் தொன்மையான இலக்கியங்கள் இருந்தபோதிலும், இலக்கிய மட்டத்திலும், ஓலைச்சுவடிகள் போன்ற ஆவணங்களோடும் உறைந்துபோய்விட்டனவோ, அத்தகைய மொழிகளுக்கு ஒரு புத்தெழுச்சியைத்தர சுவிசேஷகர்கள் முனைந்து செயல்பட்டனர். தமிழ்மொழியும் இதற்கு விலக்கல்ல. பாமரர்கள் அந்தந்த மொழிகளில் சுயமாக இயங்க, புதியவைகளை அறிந்துகொள்ள, எட்டாக் கனியாக இருந்த கல்வியைப் புகட்ட, ஒரு கல்விப் புரட்சியையே சாதிக்க, கிறித்துவ சுவிசேஷகர்கள், தம் கடனென இப்பணிகளை நிறைவேற்றினர் என்பது வரலாறு சுட்டும் உண்மை. இதனை நாம் ஏற்றுக்கொள்வதில் எவ்வித தயக்கமும் கிறித்தவ சமுதாயத்திற்கு அவசியமில்லை.

இத்தகைய மாபெரும் புரட்சி இயக்கத்திற்கு வித்திட்டது சுவிசேஷமே என்பதில் எந்தவொரு ஐயமுமில்லை. இவ்வாறான ஒரு கட்டமைப்பை நம் நாட்டிலும், பிற அநேக நாடுகளிலும் நிறுவிச் சென்றதில் கிறித்துவ சுவிசேஷர்களே முன்னோடிகளாக இலங்கினர். எத்தனையோ இவ்வாறான முன்னோடிகளைப் பற்றி நாம் அறிவோம். ஆயினும், சிலருடைய பணிகளை நாம் நினைவுகூற முற்படுவது நன்று என எண்ணுகிறேன்.

தமிழகத்தில் இவ்வாறான சுவிசேஷ மற்றும் மொழி, கல்விப் புலங்களில் காலத்தால் முற்பட்டு நிற்பவர்கள் கத்தோலிக்கப் பணியாளர்கள். தமிழகத்தில் முதன்முதலாக பாமரர்களுக்கான பள்ளிகளை நிறுவினவர் ஹென்ரிக். ஹென்ரிக்சு (1520-1600) அடிகளார் அவர்கள், போர்த்துக்கேய நாட்டினவரான அவர் தூத்துக்குடி பகுதிகளில் பணியாற்ற வந்தவர். தமிழை இயன்ற

அளவில் கற்க முயன்று, தமிழில் இலக்கண நூல் ஒன்றை அவர் 1554-ஆம் ஆண்டு முதன்முதலாக வெளியிட்டார். தமிழ்மொழியைக் கிறிஸ்தவம் வாயிலாக, எழுத்து மூலமாக அவர் இயற்றியவைகள் 669 பக்கங்கள் கொண்ட ஒரு பெரும் தொகுப்பாக 1586-ஆம் ஆண்டிலேயே, வெளிவந்துவிட்டன. ஐரோப்பாவில் அச்சுக்கலை தென்பட ஆரம்பித்த 16-ஆம் நூற்றாண்டிலேயே, ஹென்ரிக்சு அடிகளார், தமிழ் வரிவடிவங்களை அச்சேற்றினவர் என்பது ஒரு மாபெரும் சாதனை. இந்த முன்னோடியான ஆவணங்களை ஆராய்ந்துள்ளவர், நெல்லை சீமையின் பேராயராக இருந்த ஸ்டீபன் நீல் அவர்கள். உலகளவில், கிறித்தவ வரலாற்று முன்னவராகவும், ஒரு தமிழறிஞராகவும் விளங்கிய அவர், 1984-ஆம் ஆண்டில் இதனைப்பற்றிக் குறிப்பிட்டுள்ளார். **16-ஆம் நூற்றாண்டிலே முதன்முதலாக அச்சேற்றப்பட்ட தமிழ்மொழியின் வரிவடிவங்களைக் கண்ணிலே ஒற்றிக்கொள்ளலாம் போல் இருக்கின்றன**, என்று பேராயர் நீல் அவர்கள் குறிப்பிட்டுள்ளார். மிதப் பின்னைய ஆண்டுகளில் பணியாற்ற வந்த பெஸ்கி அடிகளார் எனப்படும் வீரமாமுனிவர், ஹென்ரிக்சு அடிகளாரின் வரிவடிவங்களிலே ஒன்றிரண்டு சீர்த்திருத்தங்களை செய்ய முற்பட்டார்.

1706-ஆம் ஆண்டு தரங்கம்பாடியில் சுவிசேஷப் பணித்தளத்தை நிறுவின சீகன்பால்கு அவர்களுக்கு முன்னரே,

> **16-ஆம் நூற்றாண்டிலே முதன்முதலாக அச்சேற்றப்பட்ட தமிழ்மொழியின் வரிவடிவங்களைக் கண்ணிலே ஒற்றிக்கொள்ளலாம் போல் இருக்கின்றன**

தமிழுலகில் கல்விக் கூடங்களை நிறுவ முற்பட்டவர் பிலிப்பு பல்தேயு என்ற டச்சுநாட்டு மிஷனரியாவார்(1654-66). ஈழ நாட்டின் யாழ்ப்பாணப் பகுதியில் அவர் நிறுவின தமிழ்க் கல்விக் கூடங்களும், தமிழ் ஆலயங்களும் வேறொரு வரலாற்றினைச் சார்ந்தவை. ஆயினும் அதே கால கட்டத்தில் நாகப்பட்டிணம் பகுதியில் அவர் ஆற்றிய சுவிசேஷப் பணிகளைக் குறித்த ஆய்வுகள் இன்னும் செய்யப்படவில்லை. தம் பணி காலத்திலேயே அவர் புதிய ஏற்பாடு முழுவதையும் தமிழிலே மொழிபெயர்த்தவர் என்பதை அறிஞர்கள் உட்பட அநேகர் அறியமாட்டார்கள். தரங்கம்பாடியிலுமே டச்சு நாட்டார் முதன்முதலாக 1701-ஆம் ஆண்டில் (சீகன்பால்கு அவர்களின் வரவுக்கு ஐந்தாண்டுகள் முன்னரே) நிறுவப்பட்ட சீயோன் ஆலயம் குறிப்பிடத் தகுந்ததாகும்.

சீகன்பால்கு அவர்களின் ஒப்புயர்வற்ற பணி அவர் சத்திய வேதாகமத்தின் மொழிபெயர்ப்புக்காக அவர் நிறுவின அடித்தளம். புதிய ஏற்பாடு மட்டிலுமே அவர் காலத்தில் முற்றுப்பெற்றிருந்தாலும், அதனைத் தொடர்ந்த தமிழ் வேதாகமத்தின் சுவிசேஷ ஒளியின் வரலாறு இவ்வெழுத்தரக்கத்தின் நோக்கமல்ல. வங்காளத்தில் பணியாற்றிய வில்லியம் கேரி அவர்களின் மொழிபெயர்ப்புகளைப் பற்றி நிறைய தகவல்கள் உள்ளன. ஆயினும் அப்பணிகளின் பயன்பாட்டினைக் குறித்து முழுமையாக அறியமாட்டோம். வில்லியம் கேரி அவர்களின் முதன்மையான கிறித்துவப் பணி, அவர் வங்க மொழிக்கு ஆற்றினதே. சமஸ்கிருதத்தால் வங்க மொழி விழுங்கப்பட்டிருந்த காலங்களில், வில்லியம் கேரி அவர்களே தம்முடைய அச்சூழியத்தின் வாயிலாகவும், கல்விப் பணிகளாலும், பேராசிரியப் பணி வாயிலாகவும் வங்காள மொழி உயிர்த்தெழ செய்தார். அதன் அடிப்படையிலே இந்திய அரசினர் அவருக்கு அங்கீகாரம் அளிக்கும் வகையில், அஞ்சல் தலையையும் வெளியிட்டனர்.

வில்லியம் கேரி வங்க மொழிக்கு ஆற்றின பணிகளுக்கு நிகராக பேராயர் கால்டுவெல் தென்னக மொழிகளுக்கு ஒரு புது மெருகினை ஏற்றினார். அவைகளின் ஒற்றுமையை திராவிடம் என்ற பதாகையின்கீழ் கட்டி எழுப்பினவர் பேராயர் கால்டுவெல் அவர்களாவார். இச்செயல்பாடு ஒரு மகத்தான சமுதாய மற்றும் அரசியல் இயக்கத்துக்கு வித்திட்டதை வரலாறு புறக்கணிக்க இயலாது. இவ்வரலாறு தொடர்பான ஒரு புதிரையும் இவண் சுட்டுவது சுவையாக இருக்கும். கால்டுவெல் அவர்களுக்கு இருபதாண்டுகள் முன்னரே, தென்னக மொழிகளைப்பற்றி ஆராய்ந்தவர், பௌர்னார்டு ஷிமிட் அவர்கள். ஷிமிட் அவர்களும், ரேனியஸ் அவர்களும் இணைந்து திருநெல்வேலி சீமையில் ஆற்றிய கல்விப் பணிகளின் மகத்துவத்தை நாம் அறிவோம். **ஷிமிட் அவர்கள்(1837) இம்மொழிகளின் உற்பத்தியை தமிழ் என்றே இனங்கண்டார்.** ஆனால் கால்டுவெல் அதனை ஏன் 'திராவிடம்' என்று மாற்றினார் என்பது மொழியியல் வரலாற்றில் இன்றளவும் புதிராகவே உள்ளது.

இலக்கியத் துறையில் வீரமாமுனிவர் அவர்களின் 'தேம்பாவணி' ஒரு சிறப்பிடம் வகிக்கிறது என்பது மிகையல்ல. கிருஷ்ணபிள்ளை அவர்களின் 'இரட்சணிய யாத்திரை' முக்கியமெனினும் 'இரட்சணிய யாத்திரை', 'மோட்சப் பிரயாணம்' என்று ஆங்கிலத்திலிருந்து தமிழில் தழுவி இயற்றப்பட்ட காப்பியம் என்பதை மறுத்தல் இயலாது. செய்யுள் நடை மற்றும் தமிழிசையை அடிப்படையாகக் கொண்ட நூற்றுக்கணக்கான கீர்த்தனைகளைப் பற்றி கணக்கற்ற வெளியீடுகள் உள்ளன. ஆனால் அவைகளில் எவ்வளவினை நாம் பயன்படுத்தி வருகிறோம் என்பது ஒரு பெரிய கேள்விக் குறியாகும்.

தஞ்சைக் கவிராயர் வேதநாயகம் சாஸ்திரியாரின் படைப்புக்கள் சில வெளிக்கொணரும் அறிவியல் மற்றும் பகுத்தறிவுக்கோட்பாடுகள், ஆபிரகாம் பண்டிதர் தமிழிசை வரலாற்றுக்கு ஆற்றியுள்ள முன்னோடியான நெறிமுறைகள் ஆகியன இன்னும் ஆழமான ஆய்வுகளுக்கு உரமளிப்பவை என்பது மிகையல்ல. எச்.ஏ.கிருஷ்ணபிள்ளை (1827-1900) அவர்கள் இயற்றியுள்ள 'இரட்சணிய சமய நிர்ணயம்' என்ற காப்பியம், இந்திய மற்றும் தமிழ்க் கிறித்துவ இறையியல் புலத்துக்கு எத்துணை உரமாகத் திகழவல்லது என்பது இன்னும் வெளி உலகுக்குக் கொண்டு வரப்படவில்லை.



# தமிழ் மொழியின் சிறப்பை உலகுக்கு உணர்த்திய கிறிஸ்தவ மிஷனெரிகள்

கிறிஸ்தவ மிஷனெரிகள் கிறிஸ்தவ நற்செய்தியை அறிவிக்க தமிழ்நாட்டிற்கு வந்த போதும் உலக அளவில் பேச்சு வழக்கிலும் எழுத்திலும் பழமை வாய்ந்த தனிப்பெரும் செம்மொழியாம் தமிழ் மொழியின் இனிமை, செழுமை, வளமையைக் கண்டு, அதன் பால் ஈர்க்கப்பட்டு, தமிழைப் பேசவும் எழுதவும் கற்றுக்கொண்டதோடு நிற்காமல் தமிழ் இலக்கியத்தையும், இலக்கணத்தையும் கற்று தமிழ் மொழியின் சிறப்பை உலகிற்கு உணர்த்தினார்கள். அவர்களையும் அவர்களது பணிகளையும் விரிவாகப் பார்ப்போம்.

## I. கத்தோலிக்க கிறிஸ்தவ மிஷனெரிகள்

### Rev.Fr. ஹென்றிக் ஹென்றிக்ஸ் (1520-1600)

இவர் போர்த்துகல் நாட்டைச் சேர்ந்த இயேசு சபை மிஷனெரி, தூய சவேரியாரின் அழைப்பின் பேரில் இந்தியாவிற்கு இயேசுசபை மிஷனெரியாக கோவா வந்து சேர்ந்தார். பின்னர் தூய.சவேரியாரின் ஆலோசனைப்படி தென் தமிழக கடற்கரை கிராமங்களில் நற்செய்திப் பணிசெய்ய தூத்துக்குடி வந்தார். தாமிரபரணி ஆறு வங்காள விரிகுடாவில் கலக்கும் புன்னக்காயலுக்கு தம் இருப்பிடத்தை மாற்றினார் தமிழில் நூல்களை அச்சடிக்க 16 ஆம் நூற்றாண்டில் புன்னக்காயலில் அச்சுக் கூடத்தினை நிறுவினார். தமிழில் நூல்களை அச்சிட்டார்.

1578-இல் தம்பிரான் வணக்கம் என்ற நூலினை வெளியிட்டார். 1579-இல் 'கிறிஸ்த்தியானி வணக்கம்' என்ற நூலினையும் வெளியிட்டார். தமிழ் போர்த்துக்கீசிய அகராதி இவரால் வெளியிடப்பட்டது புனிதர்களின் வாழ்க்கை வரலாறு குறித்த நூலும் இவரால் வெளியிடப்பட்டது.

### Rev.Fr. இராபர்ட் டி நோபிலி (1577-1656)

இத்தாலி நாட்டைச் சேர்ந்த இயேசு சபை போதகரான இவரை தத்துவ போதகர் என அழைப்பார்கள். இயேசு சபை சார்பில் மதுரை மிஷனை நிறுவியவர் இவரே. ஞானோபதேசம், ஆத்ம நிர்ணயம், சருண நிவாரணம், புனர் ஜென்ம ஆட்சேபம் மற்றும் பல நூல்களை எழுதி வெளியிட்டார். கோவில், அருள், பிரசாதம், குரு, வேதம், பூசை ஆகிய சொற்கள் இவரால் பிரபலமடைந்தன தமிழ்-போர்த்துகீசிய அகராதி இவரால் வெளியிடப்பட்டது.

### Rev.Fr. கான்ஸ்டன்டைன் ஜோசப் பெஸ்கி (1680-1747)

வீரமாமுனிவர், தைரியநாதர் எனத் தமிழ் மக்களால் போற்றப்படும் தமிழ் அறிஞர். பெஸ்கி ஆவார். இயேசுசபை பாதிரியாராக இந்தியா வந்த இவர் தமிழின் பால் தீராத அன்பு கொண்டவராக மாறினார். தன் வாழ்நாள் முழுவதும் கிறிஸ்தவ போதகர் பணியோடு தமிழுக்கும் தமிழ் மக்களுக்கும் தொண்டு செய்வதில் தம் காலத்தைக் கழித்தவர். பல தமிழ் இலக்கிய, உரைநடை நூல்களை எழுதி உள்ளார்.

தேம்பாவணி, கொடுந்தமிழ் இலக்கணம், பரமார்த்த குருவின் கதை, தமிழ்-இலத்தீன் அகராதி, செந்தமிழ் இலக்கணம், வாமன் சரித்திரம், சதுரகராதி என்னும் சொற்களஞ்சியம், வேத விளக்கம், அடைக்கல மாலை, கித்தேரியம்மாள் அம்மானை, வேதியர் ஒழுக்கம், திருக்காவலூர் கலம்பகம் ஆகியவை உட்பட பல நூல்கள் இவரால் எழுதப்பட்டது.

### ஜூலியன் வின்சன் (1843-1926)

தமிழ் இலக்கணத்தினை பிரெஞ்ச் மொழியில் இவர்

எழுதினார். சீவகசிந்தாமணி மற்றும் திருக்குறளின் ஒரு பகுதியை இவர் மொழி பெயர்த்து வெளியிட்டார்.

**ஆலன் டேனியலு (1907-1994)**

பிரெஞ்சு நாட்டைச் சேர்ந்த இவர், தன் வாழ்நாளின் பெரும் பகுதியைத் தமிழ்நாட்டில் கழித்தவர். தொன்ம இயல் மற்றும் இசையில் வல்லுநர். வேதம், இந்து தத்துவம் மற்றும் சைவ சித்தாந்தம் கற்றுணர்ந்து ஆய்வு மேற்கொண்டவர். காசி இந்து பல்கலைக்கழகத்தில் பேராசிரியராகப் பணி ஆற்றியவர். தமிழ் இலக்கியங்கள் மீது தீராத பற்றுக் கொண்டவர். சிலப்பதிகாரத்தை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்தவர்.

## II.சீர்திருத்த கிறிஸ்தவ மிஷனெரிகள்

**Rev.பர்த்தலோமேயு சீகன் பால்கு (1683-1719)**

ஜெர்மனியைச் சேர்ந்த இவர் கிறிஸ்தவ மத நற்செய்தி அறிவிப்பு போதகர் பணிக்காக Royal Missionary எனும் உயர் தகுதி கொண்டவராக டென்மார்க் பேரரசர் நான்காம் பிரடெரிக் அவர்களால் தரங்கம்பாடிக்கு அனுப்பப்பட்டார். 40,000 சொற்களுடன் 'மலபார் அகராதி' என்ற தமிழ் அகராதி ஒன்றை வெளியிட்டார். 17,000 சொற்களுடன் கவிதைச் சொற்கள் அடங்கிய நூலும் வெளியிட்டார் 'ஹென்றிக் ஹென்றிக்ஸ்' க்கு பின்னர் தமிழ் அச்சு இயந்திரத்தை தமிழ்நாட்டில் நிறுவியவர் இவரே.

**Rev.ஜோகன் பிலிப் ஃபெப்ரிசியஸ் (1711-1791)**

'சத்திய வேதபுத்தகம்' என கிறிஸ்தவ வேதாகமத்தை தமிழில் இவர் மொழி பெயர்த்தார். தமிழ் -ஆங்கில 'Malabar-English dictionary'. அகராதியினைத் தயாரித்து வெளியிட்டார்.

**Rev.C.T.E.ரேனியஸ் (1790–1838):**

C.M.S. மிஷனெரி சங்க மிஷனரியாக 1814 இல் சென்னைக்கு வந்து பின் தரங்கம்பாடி சென்று 5 மாதங்களில் தமிழ் மொழியை மிகச்சிறப்பாக கற்றறிந்தார்.

தமிழ் இலக்கணம் பால் ஆர்வம் கொண்டு முகவை ராமானுஜக்கவிராயரிடம் தமிழ் மொழியையும் இலக்கணத்தையும் கற்றறிந்தார். 1820 இல் பாளையங்கோட்டையில் புதியதாக தொடங்கப்பட்ட C.M.S மிஷன் பணிதளத்திற்கு தலைமை மிஷனெரியாக நியமிக்கப்பட்டார். அக்காலத்தில் திருநெல்வேலியில் இருந்த அக்கால தமிழ் பேரறிஞர் திருப்பாற்கடல்நாதன் கவிராயரிடம் தமிழ் மொழி மற்றும் இலக்கணம் குறித்து மேலும் கற்றறிந்தார். பல தமிழ் நூல்களை வெளியிட்டார். தமிழ் இலக்கண நூல், தமிழில் எழுதப்பட்ட முதல் பூகோள நூலான பூமி சாஸ்திரம் மற்றும் வேதபோதகத் திரட்டு போன்ற பல நூல்கள் இவரால் எழுதப்பட்டது. கிறிஸ்தவ வேதாகமத்தை இவர் தமிழில் மொழிபெயர்த்தார்.

**Rev.J.S.M.ஹூப்பர்**

இவர் ஆழ்வார் பாடல்களை (Hymns of the Alwars) அச்சில் வெளியிட்டார்.

**Rev.ஜென்சன் ஹெர்மன் (1842–)**

தமிழ்ப் பழமொழிகளால் ஈர்க்கப்பட்ட இவர் அவை குறித்து பல நூல்களை வெளியிட்டார்.அவை 'A classified collection of Tamil proverbs', 'A dictionary of Tamil proverbs' ஐரோப்பாவில் உள்ளவர்கள் தமிழ் மொழியை கற்றுக்கொள்ள நூல்களை உருவாக்கினார். 'A practical Tamil reading book for European beginners',

**Rev.ஜான் முர்டாக் (1819-1904)**

தமிழில் வெளியான நூல்கள் குறித்து அடவுத் தொகுப்பு ஒன்றைக் கொண்டுவந்தவர். அதில் ஒவ்வொரு நூல் குறித்தும் சிறிய குறிப்புரையும் தந்துள்ளார். இவரின் நூல் பிற்காலத்தில் தமிழக அரசின் முயற்சியால், கூடுதல் குறிப்புகளுடன் வெளியிடப்பட்டது. கிறிஸ்தவ மதபோதனையில் ஈடுபட்டதுடன், தமிழகத்தில் நிலவிய ஜாதிக் கட்டமைப்பு குறித்தும் இவர் ஆய்வு நடத்தி நூல்களை வெளியிட்டார். மகாபாரதத்தைச் சுருக்கமாக ஆங்கிலத்தில் எழுதி நூலாகக் கொண்டு வந்தார்.

**Rev.பீட்டர் பெர்சிவல்**

தமிழ்ப் பழமொழிகளில் இவர ஆர்வம் கொண்டவர். ஏறத்தாழ 5,000 பழமொழிகளைத் தொகுத்து வெளியிட்டார். அவ்வையாரின் நீதிப் பாடல்களை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்து வெளியிட்டார். தமிழ்-ஆங்கில அகராதி ஒன்றையும் தயாரித்து வெளியிட்டார். தமிழ் மொழியில் கிறிஸ்தவ வேதாகமத்தை மொழிபெயர்ப்பு செய்துள்ளார்.

**Rev.வின்ஸ்லோ, மிரன் (1789-1864)**

இவரது தமிழ் - ஆங்கிலம் அகராதி இன்றும் சிறப்புப் பெற்றதாக விளங்குகிறது. முதன் முதலில் 67,000 சொற்களுடன் இது வெளியானது. இந்த அகராதி 1862 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

**Rev.G.U. போப் (1820 - 1908)**

தமிழக மக்கள் நன்கறிந்த மிஷனெரியான தமிழ் அறிஞர் Rev. G.U. போப் ஆவார். இவர். தன் வாழ்நாள் முழுவதையும் தமிழுக்கு அர்ப்பணம் செய்தவர். திருக்குறள், நாலடியார், திருவாசகம் ஆகியவற்றை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்து அவற்றை வெளியிட்டார். தமிழ்க் கவிதைக் களஞ்சியம் என ஒன்றைத் தொகுத்து, தமிழ்க் கவிதைகளை அவற்றிற்கான குறிப்புகளுடன் வெளியிட்டார். இவர் தமிழ் - ஆங்கில அகராதியும் வெளியிட்டார்.

**பேராயர்.மகாகனம். ராபர்ட் கால்டுவெல் (1814-1891)**

தென்னிந்திய மொழிகள் அனைத்தையும் நன்கு கற்று அவை வடமொழியாம் சமஸ்கிருதத்தில் இருந்து முற்றிலும் வேறுபட்டவை, அவை திராவிட மொழி குடும்பத்தைச் சார்ந்தவை அதில் தமிழே மூத்த மொழி என்பதை திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணம் (1856) என்ற தமது ஆய்வு நூல் மூலம் உலகிற்கு வெளிப்படுத்தியவர். இவரின் நூல்கள் பிற்காலத்தில் திராவிட மொழிகள் குறித்து ஆய்வு செய்தவர்களுக்கு தொடக்க நூலாக இருந்தது. பெரும்பாலும் திருநெல்வேலி மாவட்டத்தை மையமாகக் கொண்டு மிஷனெரிப் பணியையும், தமிழ்த் தொண்டையும் ஒருங்கே இவர் மேற்கொண்டார்.

திருநெல்வேலி சாணார்கள் (1849), திருநெல்வேலி மிஷன் தொடர்பான விளக்க உரைகள் (1857), நற்கருணை தியானமாலை (1859), கிறிஸ்தவமும் இந்து சமயமும் (1874), திருநெல்வேலி மிஷனின் தொடக்ககால வரலாறு (1881), திருநெல்வேலி சரித்திரம் (1881), பரத கண்ட புராணம் (1889) போன்ற பல நூல்களை இவர் எழுதி வெளியிட்டுள்ளார்.

**J.ஜான் ஞானராஜ், கல்லிடைக்குறிச்சி**




# தமிழ் உரைநடை வளர்ச்சியில் கிறித்தவம்

தமிழ் மொழி உலகின் மிகப் பழமையான மொழிகளுள் ஒன்று. உலகில் செம்மொழி என்னும் சிறப்பினைப் பெற்ற தேர்ந்த மொழிகளுள் ஒன்றாக தமிழும் போற்றப்படுகிறது. உலகின் செம்மொழிகள் என்ற நிலையில் கிரேக்கம், சமஸ்கிருதம், இலத்தீன், பாரசீகம், அரபு, எபிரேயம், சீனம், தமிழ் ஆகிய எட்டு மொழிகள் தான் உள்ளன.

ஒரு மொழியின் இலக்கியங்களின் வளமையை அடிப்படையாக கொண்டே செம்மொழி என்னும் சிறப்பு நிலையை ஒரு மொழி அடைவதாகக் கூறுகின்றனர்.

தமிழ் மொழியின் தோற்ற காலகட்டத்தை எவறாலும் சரியாக கணித்துக் கூற இயலவில்லை. சில குறிப்புகளினடிப்படையில் சுமார் பத்தாயிரம் ஆண்டுகளுக்கு முந்தய மொழியாக ஏற்கப்படுகிறது. பல்வேறு இலக்கியங்கள், இலக்கணங்கள், நிகண்டுகள், உரைகள், மருத்துவம், கணிதம், வானவியல், வரலாறுகள், பூக்கோளம் போன்ற கருத்துக்களையுடைய நூல்கள் மிகுந்த மொழி தமிழ்.

கி. பி 16 ஆம் நூற்றாண்டு வரை இவையனைத்தும் செய்யுள் நடையில் இலக்கண மரபுகளோடு மட்டுமே இருந்துவந்த நிலையில் அவற்றை கற்றோரால் மட்டுமே புரிந்து கொள்ளும் வகையில் இருந்தன. அவை அனைத்தும் பனையோலைகளில் எழுதப்பட்டு ஏடுகளாக இருந்தன. இலக்கணத்தின் தழைகளுக்குள் கட்டுண்டு கிடந்த நம் தமிழ் அணங்காள், மெல்ல உரைநடை என்னும் தேரினில் வலம்வர தொடங்கினாள்.

ஆம். . . மக்கள் பேசும் மொழிநடைக்கும் செய்யுள் நடைக்கும் மிகுந்த வேறுபாடு உண்டு. எனவே தான் அதை அனைவராலும் அறிந்து கொள்வதில் மிகுந்த சிரமம் இருந்தது வருகிறது. ஆனால் உரைநடை வடிவம் என்பது பேச்சு மொழியிலேயே எழுதுவது. எனவே உரைநடை வடிவத்தை பாமரரும் புரிந்து கொள்ள இயலும். இம்முறையை தமிழில் அறிமுகம் செய்தவர்கள் ஐரோப்பிய கிறித்தவ சமயப் பரப்புனர்களே (மிஷனெரிகள்).

சமயக் கருத்துக்களை மக்களிடம் கொண்டு சேர்க்கும் நோக்கத்தோடு வந்திருந்த இவர்கள் அதற்கான முயற்சிகளில் ஈடுபட்டனர். அதற்குப் பெருந்தடையாக இருந்தது மொழி. பேச்சு மொழியை கற்கவே கடினமாக உணர்ந்த அவர்களால் செய்யுள் நடையைக் கற்பது சாத்தியமற்றதாக உணர்ந்தனர். அதே நேரம் ஐரோப்பிய நாடுகளில் எழுத்துவடிவத்திற்கும் பேச்சுவடிவத்திற்கும் வேறுபாடற்ற உரைநடை வடிவமே இருந்தது. இதனாலேயே அங்குள்ள மக்கள் எளிதில் கற்கவும் உலக செய்திகளை அறிந்து அறிவைப் பெருக்கிக் கொள்ளவும் முடிந்ததையும் நன்கு அறிந்திருந்தனர்.

இந்தியாவில் ஒரு குறிப்பிட்ட பிரிவினர் மட்டுமே கல்விக் கற்று அவர்களது அறிவை மேம்படுத்திக் கொண்டு மற்றவர்களை அறியாமைகளுக்குள்ளேயே வைத்திருப்பதை கண்டு வியந்தனர். எனவே அந்நிலையைக் களைய எழுத்து மொழியை அனைவருக்கும் பொதுவாக்கும் தீவிர முயற்சியில் இறங்கினர்.

இந்நிலையில் தான் இயேசுசபை பாதிரிமார்கள தகுதிக்கான சமயப்பணிகளுக்கென்று 16 ஆம் நூற்றாண்டில் (1550 - அம்பலக்காடு) அச்சு இயந்திரத்தை கொண்டு வந்தனர். அங்கு 1578 ஆம் ஆண்டு முதன்முதலாக “தம்பிரான் வணக்கம்” என்னும் தமிழ் உரைநடை நூல் அச்சிடப்பட்டது. இதுவே இந்திய மொழிகளில் வெளிவந்த முதல் தமிழ் அச்சு நூல் (மா.சு.சம்பந்தன், அச்சும் பதிப்பும் -53 ). இதனைத் தொடர்ந்து 1579-இல் கிறிசித்தியாணி வணக்கம் என்ற நூலும் 1586 இல் “அடியார் வரலாறு” என்ற நூலும் வெளியாகின. இந்நூல்களை அண்ட்ரிக் அடிகளார் என்ற பாதிரியார் வெளியிட்டார்.

அதன்பிறகு ராபர்ட் டி நோபிளி, வீரமாமுனிவர் போன்றோர் உரைநடையில் பல நூல்களை எழுதினர். அவற்றுள் வீரமாமுனிவர் எழுதிய சதுரகராதி( தமிழ்- தமிழ்) தமிழில் வெளிவந்த முதல் தமிழ் அகராதியாகும். இது செய்யுள் நடையிலிருந்த சொற்களை பேச்சு வளக்கிலுள்ள சொல்லாகப் புரிந்துகொள்ள ஏதுவாக இருந்தது.

ஆனாலும் இந்நூல்கள் அனைத்து மக்களிடமும் சென்று சேர்ந்ததாக கூற முடியாது. இவை சமயப் பணியாளர்களுக்கான நூல்களாகவே இருந்தன. மக்கள் கல்வியறிவும் வாசிக்கும் பழக்கமும் அற்றவர்களாக இருந்ததும் அதற்கு ஒரு காரணம்.

18 ஆம் நூற்றாண்டில் சீர்திருத்தக்( Protestant) கிறித்தவ மிஷனெரிகளின் வரவால் தான் உரைநடை வடிவம் தமிழில் வளர தொடங்கியது. சீகன்பால்க் என்ற ஜெர்மன் நாட்டு மிஷனெரி( 1706) தஞ்சைக்கு அருகிலுள்ள தரங்கம்பாடியில் அச்சுக் கூடம் அமைத்து பொதுமக்களின் பயன்பாட்டிற்கான புத்தங்களை அச்சிட்டு வாசிப்பை அனைவரும் விரும்ப செய்தார். அதன் பிறகே தமிழ் மெல்ல மெல்ல பனையோலைகளிலிருந்து வெளியேறி அச்சேறி அமர்ந்தது. ஆனால் 19-ஆம் நூற்றாண்டில்தான் தமிழ் உரைநடை வடிவம் மிக வேகமான வளர்ச்சியடைந்து. ஆண்டி முதல் அரசன்வரை தமிழ் எழுத்துக்களை விழிகளால் தீண்டி மனத்தால் முத்தமிட்டான். கருத்துப் பரிமாற்றங்களும் தொலைதூர செய்திகளும் அறிவியல் கண்ணோட்டமும், சமய நெறிமுறைகளும் மக்களின் மனக்கதவுகளை உடைத்துக் கொண்டு அறிவிற்குள் புகுந்தன.!

இதற்கு முதன்மையான காரணம் அனைத்துத்தரப்பு மக்களாலும், கல்வியின் பயன்பாடு உணரப்பட்டு அதற்கான அச்சு நூல்கள் அதிகளவில் அச்சிடப்பட வேண்டிய கட்டாயம் ஏற்பட்டது. மிஷனெரிமார்கள் சமயப் பணிகளோடு கல்விப்பணியில் தீவிரமாக இறங்கினர். அதுவும் ஏனோ தானோவென்று வெறுமனே எண்ணையும் எழுத்தையும் மட்டுமே கற்பிக்க விரும்பாமல், தங்களது ஐரோப்பிய முறை கல்வியை அப்படியே வழங்கிட முயன்றனர். இந்தியர்கள் முழுமையான கல்வியறிவைப் பெற்று அறிவில் சிறக்க வேண்டும் என்ற முனைப்போடு செயல்பட்டனர்.

எனவே மொழிப்பாடத்தோடு, கணிதம், மற்றும் பூகோள நூல், நாட்டு வரலாறு, உலக வரலாறு, உடலியல் நூல், விலங்குகள், தாவரங்கள் குறித்த நூல்கள் போன்ற அறிவியல் நூல்களையும் கற்பித்தனர். இதற்கான உரைநடை நூல்களையும் அவர்களே எழுதி அச்சிட்டனர். ஏற்கெனவே தமிழில் அறிவியல் நூல் இருந்திருந்தாலும் அவை உண்மைக்குப் புறம்பான கற்பனைக் கதைகளை உடையதாக இருந்திருப்பதையே காட்டுகிறது. உண்மையான அறிவியல் நூல்களைக் கற்றுத் தேர்ந்த ஐரோப்பிய மிஷனெரிகளுக்கு இது வியப்பை ஏற்படுத்தினாலும் உண்மையை நம்மவர்களுக்குள் புகுத்த அவர்கள் தயங்கியதில்லை. இந்த அறியாமையகற்றும் பணிகளுக்கு உரைநடையின் துணை அவர்களுக்கு பேருதவியாக இருந்தது.

1818- இல் மிஷனெரி ரேனியஸ் ஏற்படுத்திய துண்டுப் பிரசுரம் மற்றும் சமய நூல்கள் சங்கம் (Madras Tract and Religious Book Society) என்ற நிறுவனத்தின் மூலம் துண்டு தாள்களில் சமயக்கருத்துக்கள் மட்டுமல்லாமல் விழிப்புணர்வு தகவல்களும் அச்சிடப்பட்டு பொதுமக்களுக்கு இலவசமாக வழங்க செய்ததோடு இது மக்களுக்கு அச்செழுத்துக்களை அறிமுகம் செய்ததோடு வாசிக்கும் ஆர்வத்தையும் கல்வியின் மீது நாட்டத்தையும் பரவலாக ஏற்படுத்தியது.

கல்வி ஐரோப்பியர்களால் பொதுவுடமையாகியிருந்த அதே காலகட்டத்தில் இந்த உரைநடை வடிவிலான துண்டு பிரதிகள் மக்கள் மனதில் அதிக தாக்கத்தை ஏற்படுத்தியது எனலாம். இச்சங்கத்தின் மூலம்தான் 1831 ஆம் ஆண்டு தமிழ்த்தாள்( Tamil Magazine) என்னும் உரைநடை வடிவிலான முதல் மாதஇதழ் சென்னையில் வெளியிடப்பட்டதாக மயிலை வேங்கடசாமி குறிப்பிட்டுள்ளார் (கிறிஸ்தவமும் தமிழும்-44).

ரேனியஸ் மிஷனெரி கல்வியறிவு இல்லாத மக்களுக்கு இந்தத் துண்டுப்பிரதிகளை வாசித்துக் காட்டவும் தான் பயிற்றுவித்த மாணவர்களைக் கிராமங்களுக்குள் அனுப்பி சிறந்த கருத்துக்களை உற்று கவனிக்கும் மனப்பான்மையை ஏற்படுத்தினார். இதன் மூலம் மக்கள் தாங்களாகவே வாசிக்க வேண்டும் என்ற உந்துதலையடைந்திருக்க வேண்டும் என்பதில் ஐயமில்லை.

தமிழ் உரைநடை வடிவை செம்மைப்படுத்தியதிலும் கிறித்தவ மிஷனெரிகளின் பங்கே முதன்மையானது. ரேனியஸ் தான் உரைநடை வடிவ தமிழில் முதன் முதலாக வார்த்தைகளுக்கு இடையில் இடைவெளி விட்டு எழுதும் பழக்கத்தை கொண்டுவந்தவர். (சிட்னி சுதந்திரன், 'பரிசுத்த வேதாகமம்' ஒரு வரலாற்று கண்ணோட்டம்-39). மேலும் இவரே முதன் முதலாகத் தமிழில் நிறுத்தற் குறியீடுகளைப் பயன்படுத்தியவர் (த.எஸ்தர் நான்சி பியூலா. தமிழில் விவிலிய மொழிப் பெயர்ப்புகள் ஓர் ஒப்பாய்வு- 164) இவருக்கு பிறகு வந்த மிஷனெரிகளும் தமிழை பொதுமைப்படுத்தும் பணிகளை அதிக அளவில் மேற்கொண்டதனால் தான் இன்று உரைநடை வடிவில் உள்ளத்தில் தோன்றுவதையெல்லாம்முறைப்படுத்தி எழுத்துக்களாக்கி படைப்புக்களை தமிழ்கடலில் துளிகளாக்கிக் கொண்டிருக்கின்றனர். பிற மொழிகளின் உயர்ந்த படைப்புகளையும் எளிதில் உரைநடையாக்கம் செய்து கருத்துக்களை உடனுக்குடன் பெற முடிகிறது.

கிறித்தவ புனிதநூலான விவிலியம் இந்திய மொழிகளிலேயே தமிழில் தான் முதன்முதலில் மொழிபெயர்ப்பு செய்யப்பட்டது என்பதும் குறிப்பிடத்தக்கதாகும். இம்மொழிப்பெயர்ப்பு பணியினால் தமிழ் உரைநடை வடிவம் அதிக அளவில் மெருகேறியது. தமிழில் கலந்து எழுதப்பட்ட வடமொழிச் சொற்களை நீக்கி அதற்கு இணையான தமிழ் சொற்களை பயன்படுத்தியும் (சிநேகம்- அன்பு), புதிய சமயச் சொற்களை உருவாக்கியும், சந்திப் பிழைகளின்றியும் எழுதக் கற்பித்து தமிழின் செழுமையை மேலும் மேலும் வளமையாக்கினர்.

அதிலும் 1838 - இல் இந்தியாவிற்கு சமயப் பணிக்கென்று வந்திறங்கிய கால்டுவெல் என்னும் பேராளுமை தமிழ் மொழிக்கு இறைவன் அருளிய கொடை. இவர் தமிழ் என்பது திராவிடம் என்ற ஒரு மொழிக்குடும்பத்தின் தாய் என்றும், சம்ஸ்கிருதத்தின் வேரிலிருந்து அது முற்றிலும் வேறுபட்டதென்றும், சம்ஸ்கிருதத்தின் உறவின்றியே அது தனித்தியங்கும் திறனைப் பெற்றுள்ளதென்றும் அறிவுலகம் அறிந்து மதித்தது கால்டுவெல்லின் 'திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணம்' என்ற நூல் 1856-ல் இங்கிலாந்தில் வெளிடப்பட்ட பின்னர்தான். அந்நிகழ்வே இன்றைய தமிழின் செம்மொழி என்னும் மாபெரும் தகுதிக்கான தொடக்கப்பாதையானது.

தமிழ் உரைநடை வடிவத்தைத் தொடங்கியும் வளர்த்தும் மங்காப் புகழடையச் செய்த கிறித்தவச் சமயப்பணியாளர்களின் மொழிப்பற்றை இன்றைய தலைமுறையினரும் தொடர்ந்து செழுமையாக்க வேண்டியது அவசியம்.

**Dr.ஜான்சிபால்ராஜ், வரலாற்று ஆய்வாளர்.**

# சேலம் வந்த கிறிஸ்தவ திருத்தொண்டர்களின் தமிழ் இலக்கிய படைப்புகள்

## – ஒரு பார்வை

சேலம் மாவட்ட பகுதிகளுக்கு கிறிஸ்தவ நற்செய்தியை அறிவிக்க வந்த திருத்தொண்டர்கள் தங்கள் மறைபரப்பு பணிகளுக்கு முக்கிய ஆதாரமாக விளங்கிய தமிழ் மொழியைக்கற்று அதில் பேச, எழுத, படிக்க, பிரசங்கம் செய்ய கற்றுக்கொண்டதையும் தாண்டி அந்த தமிழை நேசிக்கவும், அதில் யோசிக்கவும், சுவாசிக்கவும் கலந்தபோது முகிழ்த்த மலர்கள்தான் அவர்கள் தந்த படைப்புகள். அவைகள் வாடா மலர் மாலைகளாக இன்றும் தமிழ்தாயின் மேனியை அலங்கரிக்கின்றன. தமிழுக்கு மட்டுமின்றி மிஷன் பணிகளைப் பற்றியதான வரலாறுகளை சொல்வதான கடிதங்களாகவும், நினைவு குறிப்புகளாகவும், நற்செய்தி பணிகளைப் பற்றியதான தகவல்களாகவும், மிஷன் பணித்தளங்களின் வரலாறுகளாகவும் இன்றும் விளங்கும் அந்த திருத்தொண்டர்களின் படைப்புகள் இலக்கிய படைப்புகளாகவும், வரலாற்றின் சான்றுகளாகவும், ஆதாரங்களாகவும் இன்றும் திகழ்கின்றன. கிறிஸ்தவ திருத்தொண்டர்களின் இத்தகைய சேவைகள் தொண்டுகள் தமிழ் இலக்கிய வரலாற்றிலும், நாட்டின் வரலாற்றிலும் சாதனைகளாக, சாட்சிகளாக இன்றும் பேசப்படுகின்றன.

**ரோமாபுரி பிராமணன்**

சேலம் வந்த முதல் கிறிஸ்தவ திருத்தொண்டர் சங்கை இராபர்ட் டீ நொபிலி சுமாமியார் இத்தாலிநாட்டின் டஸ்கனி மாநிலத்தில் அரச குடும்பத்தில் உதித்த மகா பிரபு ஆவார். திரண்ட ஆஸ்தி, உயர்ந்த கல்வி, செல்வாக்குகள் மிகப்பொற்றவர். அப்பொழுது ரோமாபுரியில் போப்பாண்டவராக இருந்தவரின் நெருங்கிய உறவினராகவும் இவர் இருந்தார். இவை அனைத்தையும் இயேசுவின் திருப்பணிக்காக அற்பமும் குப்பையுமாக எண்ணி விட்டுவிட்டு இயேசு சபையில் குருவானவராக சேர்ந்து நற்செய்தி அறிவிக்கும் திருத்தொண்டராக தென்னிந்தியாவிலுள்ள தமிழகத்திற்கு 1606-ஆம் ஆண்டு வந்து சேர்ந்தார்.

சங்கை இராபர்ட் டீ நொபிலி சுவாமியார் தன்னை இந்தியர்களோடு ஒரு இந்தியனாக இணைத்துக்கொண்டு வாழத் துணிவு கொண்டார். முதலில் இந்து சமயத்திலுள்ள மேற்குலத்தாரை மனந்திருப்பினால் அனைத்து குலத்தினரும் அவர்களைப் பின்பற்றி மனந்திரும்புவார்கள் என்று நம்பினார். இதுவே அவரது புதுமையான தவக் கோலத்திற்கு அடிப்படையாக அமைந்தது. அரச குலத்தில் பிறந்த ரோமாபுரி பிராமண சந்நியாசி என்று தன்னை அழைத்துக்கொண்டார்.

சுவாமியாருக்கு இத்தாலியன், லத்தீன், பிரெஞ்சு, ஆங்கிலம், போர்த்துக்கீசியம், சமஸ்கிருதம், பெர்சியன், தமிழ், மற்றும் தெலுங்கு ஆகிய மொழிகளில் புலமை உண்டு. வரலாற்றில் முதல் முறையாக 1623-ஆம் ஆண்டு வருகையின் காலத்தில் சேலம் நகரின் தெருக்களில் இயேசுவைப் பற்றி பிரசங்கம் செய்தார். சேலம் மாவட்டத்தில் உள்ள ஓமலூர் தாலுக்காவில் உள்ள மாரமங்கலம் என்ற இடம்தான் அன்று சுவாமியார் ஸ்தாபித்த மாரமங்கலம் மிஷன் இதுவே கொங்கு மண்டலத்தின் முதல் தேவாலயம் என வரலாற்றில் அழைக்கப்படுகிறது. 1626-ல் எழுப்பப்பட்ட இந்த ஆலயமே கொங்கு நாட்டிலும், சேலம் நாட்டிலும் உருவான முதல் தேவாலயம். இன்றைக்கு 395 ஆண்டுகளுக்கு முன்பு இந்த பகுதியின் முதல் கிறிஸ்தவ தேவாலயத்தை ஸ்தாபித்த சங்கை நொபிலி சுவாமியார் தமிழுக்கு தொண்டு செய்த ஐரோப்பியர்களில் முன்னோடியாகத் திகழ்ந்தவர்.




**சங்கை மோரிஸ் பிலிப்ஸ் ஐயர்** (Rev. Maurice Phillips)

சங்கை J. M. லெக்லர் ஐயர் (1804-1861) அவர்களின் மருமகனான சங்கை மோரிஸ் பிலிப்ஸ் ஐயர் லெக்லர் ஐயர் காலத்திற்குப் பிறகு சேலம் மாவட்ட பகுதிகளில் இன்றளவும் நிலைத்து நிற்கும் சிறப்பான பணிகளை செய்து தனது மாமனாரைப் போலவே சிறந்து விளங்கினார். தமிழிலும் வரலாற்றிலும் மிகுந்த ஈடுபாடும் தீராத ஆர்வமும் உடையவராகத் திகழ்ந்தார். தமிழில் சொற்பொழிவு ஆற்றுவதில் சிறந்து விளங்கிய சங்கை பிலிப்ஸ் ஐயர் சேலம் இலக்கிய கழகத்தில் (Salem Literary Society) அடிக்கடி தமிழ் இலக்கிய மற்றும் வரலாற்றுச் சொற்பொழிவுகளை நடத்துவாராம். ஐயரின் வரலாற்றுக் கட்டுரைகள் பல்வேறு வரலாற்று இதழ்களிலும் நூல்களிலும் வெளியிடப்பட்டு அவைகள் இன்றளவும் வரலாற்று ஆவணங்களாக திகழ்கின்றன. இவரது காலத்தில் தான் சேலத்தில் லண்டன் மிஷன் உயர்நிலைக் கல்விக்கூடம்( 1877) உருவாக்கம் பெற்றது.

சேலத்தில் 1870 களில் ஏற்பட்ட காலரா பெருந்தொற்றுக் கொள்ளை நோய்க்கு பயந்து எங்கே சேலம் ஐரோப்பிய மிஷனெரிமார்களின் கல்லறைத் தோட்டமாக மாறிவிடுமோ என்று

அதற்கு அஞ்சி அதை மாற்ற சேலம் மிஷன் பணித்தளத்தை முடிவிடும் முடிவை எதிர்த்து சேலம் மிஷன் பணித் தளத்தை தானே துணிந்து ஏற்றுக் கொண்டு மிஷன் பணிகளை சிறப்புடன் நிறைவேற்றியவர் என்ற பெருமை பெற்றவர் சங்கை மோரிஸ் பிலிப்ஸ் ஐயர்.

**சங்கை வில்லியம் இராபின்சன் ஐயர்** (Rev. William Robinson, L. M. S 1884-1909)

சேலம் மாவட்ட பகுதிகளில் குற்றச் செயல்களில் ஈடுபட்டு அதன் முலமாக பிழைப்பு நடத்தும்படியாக தள்ளப்பட்ட இனத்தைச் சேர்ந்தவர்களை அன்று குற்றப் பரம்பரை என முத்திரை குத்தி போலீஸ் அடக்குமுறைகளில் துன்புறுத்தப்பட்டு வந்தனர். இவர்களின் துயர்துடைத்து இவர்களுக்கு மறுவாழ்வு அளித்து இவர்கள் வாழ்வில் ஒளி ஏற்றியவர்தான் சங்கை இராபின்சன் ஐயர். இவர்களுக்காக சேலம் மாவட்ட பகுதிகளில் சுக்கம்பட்டி, முத்தம்பட்டி போன்ற இடங்களில் இவர்களுக்கு விவசாய நிலங்களை வழங்கி, அங்கே இவர்களுக்கான குடியிருப்புகளையும் அமைத்துத் தந்தார் அவர். சுக்கம்பட்டி பகுதியில் இப்படி உருவாக்கப்பட்ட குடியிருப்பிற்கு தனது காலஞ்சென்ற மனைவி திருமதி. எலிசபெத் என்ற லிசி அம்மாளின் பெயரில் எலிசபெத் பேட்டை என்று பெயரிட்டார் அது இன்றளவும் அப்படியே அழைக்கப்பட்டு வருகிறது.

இதேபோல ஏற்காட்டில் லாங்லி பேட்டை மற்றும் லூத்தர்பேட்டை ஆகிய குடியிருப்புகளுக்கு இடையே சங்கை இராபின்சன் ஐயர் தனக்குச் சொந்தமாயிருந்த இடத்தை ஏற்காட்டில் வீடற்ற ஏழை கிறிஸ்தவர்களுக்கு வீடுகட்டிக்கொள்ள தானமாக அளித்தார் அந்த இடம் இன்றும் இராபின்சன் பேட்டை(Robinsonpet) என்று அழைக்கப்பட்டு வருகிறது.

இப்படி தீவிர சமுக சேவைகளில் ஈடுபட்டிருந்த ஐயர் தமிழ் மற்றும் ஆங்கில இலக்கியத்திலும், ஆன்மீகம், மிஷன் வரலாறு போன்ற துறைகளிலும் முத்திரை பதித்தார். சேலம் மிஷன் வரலாற்றை முதன்முதலாக எழுதிவைத்தவர் இவரே. ஆனால் இவரது அந்த சுருக்கமான வரலாற்று நூல் கையெழுத்துப் பிரதியாகவே நிலைத்துவிட்டது. மேலும் இவர் எழுதிய "பிரம்மாவிலிருந்து கிறிஸ்துவிற்கு" (From Brahm to Christ )என்ற கவிதை நூல் குறிப்பிடத்தக்கது. 1908 ஆம் ஆண்டு சேலத்தில் சங்கை இராபின்சன் ஐயர் 'சேலம் ஞானப்பாட்டுப் புத்தகம்' என்ற கிறிஸ்தவ பாமாலைகளின் தொகுப்பு நூலை வெளியிட்டார்.

**முடிவுரை:**

சேலம் வந்த கிறிஸ்தவ திருத்தொண்டர்கள் தமிழுக்கும், வரலாற்றிற்கும் சிறப்பான சேவைகளை தங்கள் படைப்புகளாக தந்துவிட்டு போயிருக்கிறார்கள். அவைகள் இன்றும் அவர்கள் பெயரைச் சொல்லி வருகின்றன. இங்கே மேலும் சில வரலாற்றுச் செய்திகளையும் குறிப்பிடுவது எனக்கு அவசியமாகத் தெரிகிறது. சேலம் வந்த முதல் சீர்திருத்த கிறிஸ்தவ திருத்தொண்டர் சங்கை ஹென்றி கிறிஸ்பு (1827 சேலம் மிஷன் ஸ்தாபிதம்) சேலம் வரலாற்றிற்கும், சேலம் மிஷன் பணித்தள வரலாற்றிற்கும் செய்த சேவைகள் அவர் எழுதிய கடிதங்கள், கூட்ட அறிக்கைகள், சட்ட ஆவணங்கள் ஆகியவற்றிலிருந்து தெரியவருகிறது. 'சேலம் மேற்றிராசன சரித்திரச் சுருக்கம்' என்ற நூலை எழுதிய. சங்கை M.S. ஜோசப் அடிகள் (1921-1995), மற்றும் சேலம் மிஷன் வரலாறு ஒரு நூற்றாண்டு காலம் (A Hundred Years of Salem Mission History) என்ற சேலம் சீர்திருத்த கிறிஸ்தவ வரலாற்றை சொல்லும் நூலை எழுதிய சங்கை T. C. விட்னி ஐயரையும் இங்கே மறக்க இயலாது. இங்கே இந்த எனது கட்டுரையில் சேலம் மாவட்ட பகுதிகளில் நற்செய்தி பணியாற்றிய கிறிஸ்தவ திருத்தொண்டர்களின் எழுத்துச் சேவைகளை மட்டுமே ஒரு மேலோட்ட பார்வையாக குறிப்பிட்டுள்ளேன். தமிழுக்கும், வரலாற்றிற்கும் சேலம் வந்த மிஷனெரிமார்களும், சேலம் கிறிஸ்தவர்களும் செய்த இலக்கிய வரலாற்றுச் சேவைகளை விவரமாக சொல்லப்போனால் அது விரிந்து பெருகும்.

**சேலம் வரலாற்றுச் சங்கத்திற்காக,**
**ஜே. பர்னபாஸ்**

தமிழ் நாட்டின் தனிப்பெரும் நாவலாசிரியர்

அ மாதவையா அவர்களின்

# கிளாரிந்தா

தமிழ்நாட்டில் வெளி வந்த முதல் வரலாற்று நாவல்

தொடர் –10

'நல்லோர் சேர்க்கையை நன்கு பயன்படுத்திக் கொள்கிறீர்கள்' என்றார் சந்நியாசி. பேத்தியைப் பார்த்து 'நீ, உள்ளே போ அம்மா. ராகவனிடம் சொல்லி சுற்றுப்புறத்தை அடிக்கடி சுத்தம் செய்யச் சொல்லவேண்டும்' என்றார்.

பெண் போவதற்கு முன்னால், மனமார்ந்த நன்றியும் இன்பமும் ததும்ப, நாணத்துடன் லிட்டில்டனை ஒருமுறை பார்த்துவிட்டுச் சென்றாள்.

மறையும் அவள் உருவத்தை சஞ்சலத்துடன் பார்த்தவாறே, லிட்டில்டன்:

'பிராமணர்கள் வழக்கப்படி அவளுக்கு ஏற்கெனவே கல்யாணம் ஆகிவிட்டிருக்கும் என்று நினைக்கிறேன்' என்றார்.

'இன்னும் இல்லை. அதுதான் எனக்கு இப்பொழுது கவலையாக இருக்கிறது. இன்னும் சரியான இளைஞனைத் தேர்ந்தெடுக்க முடியவில்லை. நீங்கள் சொல்லுகிறபடி எங்கள் வழக்கப்படி அவளுக்கு இதற்கு முன்னாலேயே கல்யாணம் ஆகியிருக்கவேண்டும்' என்றார் சந்நியாசி.

அது மூடவழக்கம் என்பதை நீங்கள் ஒப்புக்கொள்ளத்தான் வேண்டும். அன்பு, பகை என்றால் இன்னதென்று தெரியாத பருவத்தில் இரு குழந்தைகளை வாழ்க்கையில் பிணைப்பது நியாயமல்ல. பலருக்கு இது பெருந்துன்பமாக முடியும் என் பதில் சந்தேகமில்லை. உங்களிடையே விவாகரத்தும் இல்லை' என்றார் லிட்டில்டன். 'பெண்ணுக்கு இல்லை. கணவன் விரும்பினால் ஏதோ சிறு சாக்கைச் சொல்லி மனைவியைத் தள்ளிவைத்துவிட முடியும். ஜீவனாம்சமாக சிறுதொகை வாங்கிக்கொள்ளத் தான் அவளுக்கு உரிமை உண்டு. ஆண் எத்தனை மனைவிகளை வேண்டுமானாலும் மணம் செய்துகொள்ளலாம். ஆனால் கணவன் இறந்த பிறகுகூடப் பெண் மறுமணம் செய்துகொள்ள முடியாது.'

'நிலைமை இப்படி இருக்கும்போது குழந்தை மணம் மேலும் கண்டிக்கத்தக்கதாகிறது. பெண்கள் தங்கள் கணவர்களின் சபல சித்தத்தின் விளையாட்டுக் கருவிகள் போல் ஆகின்றனர். உங்கள் பெண்கள் எப்படித்தான் மனமொப்பிச் சகிக்கிறார்களோ?' என்று கேட்டார்.

அவர்களை யாரும் கேட்பதில்லை. எங்கள் முன்னோர்கள் காலத்தில் இப்படியில்லை. இளம் பெண்கள் தங்கள் கணவர்களைத் தாங்களே தெரிந்தெடுக்கக்கூட அனுமதி இருந்தது. ஆனால் குழந்தை மணத்திலும் ஒரு சில பயன்கள் இருக்கத்தான் செய்கின்றன. உங்கள் சமுதாயத்தில் இருப்பதுபோல் மணமாகாத பெண்கள் இங்கு இல்லை. 'பெண் கற்பையும் அது பாதுகாக்கிறது.'

பெண் கற்பைப் பாதுகாக்க இத்தனை அசாதாரணமான பாதுகாப்புத் தேவை என்றால் அது உங்கள் பெண்களுக்குச் சிறப்பு ஆகாது. உங்களிடையே நிலவும் சதி வழக்கம் குழந்தை மனத்தைவிட மிலேச்சத்தனம் வாய்ந்தது. அது உங்கள் நாகரிகத்தின் பெரிய கறையாகும். பிராமணர்களாகிய நீங்கள் கல்வி கேள்வியில் சிறந்து விளங்குகின்றீர்கள். உயர்ந்த தத்துவம் பேசுகின்றீர்கள். தமக்கென வாழா பிறர்க்கென வாழும் தகைமையும் உங்களிடம் உண்டு. கொடிய விலங்கு நன் விஷப்பூச்சிகளைக் கொல்வதைக்கூடப் பாவமாகக் கருதுகின்றீர்கள். அப்படியிருக்க, கணவர்கள் இறந்தால் அவர்கள் உடலோடு உங்கள் பெண்களையும் உடன்கட்டை எற்றுகிறீர்கள். அயல் நாட்டினருக்கு இதை நம்பக்கூட முடிவதில்லை. நீங்கள் எப்படி இவ்வளவு ஈவிரக்கமில்லாமல், மனிதத் தன்மையற்று இருக்க முடிகிறது?' என்றார்.

'நீங்கள் பார்க்கிறவிதமாகப் பார்த்தால் அது கொடுமை வாய்ந்தது தான். ஆனால், வாழ்க்கையையும் மரணத்தையும் பற்றிய எங்கள் கருத்துக்கள் உங்களுடையவைகளைப் போலல்லாமல் முற்றிலும் மாறுபட்டவை. சுவர்க்கத்துக்குச் செல்லும் ஏணியிலுள்ள எண்ணற்ற படிகளில் இந்த வாழ்க்கை ஒரு படியாகும் என்றே நாங்கள் நம்புகிறோம். ஒரு படிக்கும் இன்னொரு படிக்கும் உள்ள இருண்ட இடைவெளிதான் மரணம். ஆனால் இந்த அற்புத மாய ஏணியில் சாதாரணமாக ஏறி இறங்குவது போலல்லாமல், ஒரு படியினின்று மறுபடிக்குத் தாவிவிடவேண்டியதிருக்கிறது. அவரவர் கர்மத்துக்கு ஏற்றவாறு ஆத்மா மேலோ கீழோ செல்லுகிறது. இதையே வேறுவகையாகவும் உணர்த்தலாம். ஒரு தாய் குழந்தைக்குப் பாலூட்டுகின்றாள். ஒரு மார்பில் பால் தீர்ந்துவிட்டதும் குழந்தையை பால் நிறைந்த மார்புக்கு மாற்றுகிறாள். என்ன

நடக்கப்போகிறதென்பதை அறியாத குழந்தை, இடையிலுள்ள சில வினாடிகளில் வீறிட்டழுகிறது. மரணத்தின் வேதனையும் அதைப் போன்றுதான். ஒரு சதியும், தன் அன்புக் கணவனோடு சுவர்க்கம் அடைவதாக நம்புவதால் அவனோடு இறப்பதற்கு அஞ்சவில்லை. எங்கள் பெண்கள் எத்தனையோ பேர் சிரித்துக்கொண்டே தங்கள் கணவர்களின் பின்னால் மரண இருளின் பள்ளத்தாக்கைக் கடந்து செல்லுவது, குழந்தை மனம் அப்படியொன்றும் மோசமான தல்ல என்பதையே காட்டுகின்றது' என்றார் பண்டிதராவ்.

'அந்த வாதத்தை நான் ஒப்புக்கொள்ள முடியாது. பிறக்காத குழந்தைகளுக்கு ஓர் அனுமானமாக மணம் செய்வித்தால்கூட அவற்றில் சில மணங்கள் தற்செயலாக இன்பமுள்ளவையாக அமையும். ஆனால் அதிலிருந்து நாம் ஒரு முடிவுக்கும் வரமுடியாது. திருமணம் என்பது இருதரப்பினருக்கும் இன்பமளிக்கவும், நல்ல சந்தானத்தையடையவும் ஏற்பட்டது என்றால், குழந்தை மணம் கண்டிக்கத்தக்கதாகும். சில மனைவிகள் மனப்பூர்வமாகச் சதியாகிறார்கள் என்று சொல்லுகின்றீர்கள். ஆனால் அவர்கள்கூட பெரும்பாலும் மதவெறியாலும், தாளாத துக்கத்தாலும், பழக்கத்தின் கட்டாயத்தாலும், பொதுமக்கள் கருத்துக்குப் பணிவதாலுமே, அப்படிச் செய்கிறார்கள் என்று எனக்குத் தோன்றுகிறது. சிலர், தன்னலங்கொண்ட உறவினரின் சூழ்ச்சியால் உடன்கட்டையேறக் கட்டாயப்படுத்தப்படுகின்றார்கள் என்பதை நீங்கள் மறுக்கமுடியாது. அது கொலையேயாகும். சட்டம் தண்டிக்கவேண்டிய குற்றம்' என்றார் லிட்டில்டன்.

'அப்படி சதியாக வேண்டுமென்ற நியமமில்லை. அப்படிப்பட்ட சதியை யாரும் பாராட்டுவதுமில்லை. அது நீங்கள் சொல்லுவதுபோலக் கொலைதான்' என்று சந்நியாசி சொன்னார். பின்னர், ஆனால் நான் உங்களை வெகுநேரம் நிறுத்தி வைத்துவிட்டேன். நீங்கள் இவ்வூரில் இருக்கும்வரை அடிக்கடி வருவீர்கள் என்று நம்புகிறேன். பாயியிக்கு சீக்கிரமே திருமணம் நடக்கலாம். அப்பொழுது உங்களுக்கு அழைப்பு அனுப்புவேன். நீங்கள் வருகை தந்து என்னை கௌரவிக்கவேண்டும். அப்படியே எங்கள் திருமணச் சடங்கு முறைகளைப் பார்த்ததாகவும் இருக்கும். நீங்கள் அவள் உயிரை இன்று காப்பாற்றினீர்கள். என் உயிர் உள்ளளவும் நான் அதை மறக்கவியலாது. உங்கள் வருகையை நான் எப்பொழுதும் விரும்புவேன். நீங்கள் உங்கள் நாட்டினரைப் போலல்லாமல் வேறுவிதமாக இருக்கிறீர்கள். உங்களை எனக்குப் பிடித்திருக்கின்றது' என்றார்.

'உங்களுக்கு என் மனமார்ந்த நன்றி. எனக்கும் அதே போன்று உங்களுடன் பேசுவது பிடித்திருக்கிறது. உங்களோடு பழக விரும்புகின்றேன். திருமண அழைப்புக்கும் நன்றி. நான் நிச்சயம் வருவேன். இந்த அழகிய ஆபரணத்துக்கும் நான் உங்களுக்குக் கடன்பட்டிருக்கின்றேன். ஆனால் அதை அந்த அம்மணி இழந்துவிட்டதைக் குறித்து வருந்துகின்றேன். என் செயல் நீங்கள் போற்றத்தகுந்ததாக வைத்துக்கொண்டாலும், அவள் அதிகமாகப் பயன்படுத்தாத இதைவிட விலை குறைந்த பொருள்கூட, தகுந்த நினைவுச்சின்னமாக இருந்திருக்கலாம்' என்றார் லிட்டில்டன்.

'நீங்கள் இன்று எனக்குச் செய்த உதவிக்கு, இதைப் போன்ற ஆயிரம் மரகதங்களும் இணையாகாது' என்று மனப்பூர்வமாக சந்நியாசி சொன்னார். மேலும் சொல்லுவார்;

'தயவு செய்து வைத்துக்கொள்ளுங்கள். அது தான் தகுந்த அன்பளிப்பு. ஏனென்றால் இது அவளுடையது. பிரதாபுக்கு அதாவது மகாராஜாவுக்கு இயற்றியனுப்பிய பிரார்த்தனைக்காக மகாராஜா அவளுக்கு அளித்தது.'

'அப்படியானால் நான் அதை வைத்துக்கொள்ளுகிறேன். நான் இதை விலைமதிப்பற்றதாகக் கருதுகின்றேன். அவளுடைய தனி அழகுக்கும் திறமைக்கும் ஏற்ற நல்ல கணவனைத் தெரிந்தெடுப்பீர்கள் என்று நம்புகின்றேன்.'

'தெய்வ சித்தம்போல் நடக்கும்' என்றார் சந்நியாசி.

லிட்டில்டன் விடைபெற்றுச் சென்றார்.



## மரணமும் திருமணமும்

மறுநாள் அரசர், அமாத்யாவோடு சந்நியாசியின் வீட்டிற்கு விஜயம் செய்தார். பேத்தி நச்சுப் பாம்பின் பிடியிலிருந்து

தெய்வாதீனமாகப் பிழைத்ததை விசாரித்துப் போக வந்ததாகச் சொல்லிக்கொண்டாலும், உண்மையில் சந்நியாசி ஆங்கிலேயரோடு நடத்திய பேட்டிக்கு அரசியல் முக்கியத்துவம் ஏதேனும் உண்டா என்பதைக் கண்டுகொள்ளவே வந்திருந்தார். சிறிதுநேரம் வழக்கம்போல் பேசிக்கொண்டிருந்தார்கள். ஆனால் திடீரென சந்நியாசி கைகளை நெஞ்சின் இடது புறம் கொண்டுபோனவர் அப்படியே கீழே சாய்ந்து விட்டார். அவர் இதயத்துடிப்பும் நின்று, உயிரும் பிரிந்து விட்டது.

தனக்கு உற்றதுணையும் உறுதுணையுமாக இருந்த நெடுநாளைய நண்பர் போய்விட்டாரே என்று அரசர் கண்ணீர் விட்டார். பாயி, செய்தியைக் கேள்விப்பட்டதும் திகைத்து அப்படியே நின்றுவிட்டாள். அவரே அந்த அபலைக்கு இது காறும் தாயும், தந்தையும், உடன் பிறந்தாரும், நண்பரும் எல்லாமுமாக இருந்து



வந்தார். சற்றுநேரம் கழித்து கண்ணீர் மடை வெள்ளமாகப் பொங்கி வழிந்தது. அந்தத் துர்ப்பாக்கியவதி இப்பொழுது தான், தான் உண்மையிலேயே அனாதையாகிவிட்டதாகச் சொல்லிச் சொல்லி ஏங்கியழுதாள். வயதான மாமிக்கோ உடலும் புத்தியும் மிகத் தளர்ந்த நிலையிலிருந்ததால், என்ன நடக்கிறதென்பதைச் சரியாகப் புரிந்துகொள்ளக்கூட இயலவில்லை. அரசரின் உத்தரவின்பேரில் கிளாவிருந்தாவின் உறவினர் சிலர் அவளுக்குத் துணையிருக்க வந்தனர். ஆனால் அவர்கள் எல்லோருமே பேராசை பிடித்து, திருப்தியற்று முனங்கிக்கொண்டிருப்பவர்கள். கிடைத்த வாய்ப்பை நன்கு பயன்படுத்திக்கொள்ள வேண்டுமென்பதிலேயே குறியாக இருந்தனர். தங்களைக் கவனிக்காததினாலேயே சந்நியாசிக்கு இப்படிச் சம்பவித்தது என்றும் ஓயாமல் பிதற்றிக் கொண்டிருந்தார்கள். அந்த வீட்டில் பாயியிடம் உண்மையிலேயே பரிவு காட்டியவர்கள் வேலைக்காரப் பெண் சாரதாவும் ஹவில்தார் ரகோஜியுந்தான். துரதிர்ஷ்டம் பிடித்த அந்தப் பெண்ணின்மீதுள்ள வாஞ்சையாலும் இறந்தவர்மீது கொண்டிருந்த மரியாதையாலும் அவர்கள் அவளோடு சேர்ந்து துக்கப்பட்டனர். தங்களுக்குத் தெரிந்த வகையில் அவளுடைய துக்கத்தை ஆற்றவும் முற்பட்டனர். சந்நியாசி விரும்பியிருந்தபடி அவருடைய உடல் சகல ஆடம்பரத்தோடும் வல்லத்துத் தோட்ட வீட்டிற்கு எடுத்துச் செல்லப்பட்டது. அங்கு அவருக்குப் பிடித்தமான மாமரத்தின் நிழலில் அவரது அந்தஸ்துக்கும் காவியுடைக்கும் தகுந்த மரியாதைகளோடு அடக்கஞ்செய்யப்பட்டது. அந்த இடத்தில் வெண்பளிங்குக் கல்லால் ஒரு சிறு கோவில் கட்டி அதை அவருடைய குலதெய்வமான மஹாதேவனுக்குப் பிரதிஷ்டை செய்தார்கள்.

அரசர், பெண்ணின் பாதுகாவலராக உடனே பொறுப்பேற்றுக்கொண்டார். இரண்டு வாரங்களுக்குப்பின் அரசி அவளை அழைப்பித்தாள். சிறிது நேரம் பரிவாகப் பேசிக் கொண்டிருந்துவிட்டு அவளைத் தாரமிழந்த திவானுக்கு மணம் செய்விக்க அரசர் நினைத்திருப்பதாகத் தெரிவித்தாள். திவான் பெருத்த செல்வந்தர் என்றும், எல்லா வகையிலும் விரும்பத் தகுந்த மாப்பிள்ளை என்றும் சொல்லி மற்றும் திவானின் குணாதிசயங்களையும் வர்ணித்துக் கொண்டே சென்றாள்.

பாயிக்கு இந்தத் தலைவிதியைப்பற்றிக் கேள்விப்பட்டதும் இதயம் அப்படியே உறைந்துவிட்டது. ஆனால் துக்க மிகுதியாலும் அதிர்ச்சியாலும் அவள் வழக்கத்துக்கு விரோதமாகத் தேம்பித் தேம்பி அழுதாள். விம்மல்களுக்கிடையே தாத்தா மரணமடைந்த இவ்வளவு சீக்கிரத்தில் தான் திருமணத்தைப் பற்றி நினைக்க விரும்பவில்லை என்று மாத்திரம் சொன்னாள். அரசியோ அவளைப் பாதுகாக்க ஆள் இல்லாததினாலேயே மணத்தை விரைவில் வைக்கவேண்டிய அவசியத்தை வலியுறுத்தினாள். மணச் சடங்கு நடக்கும் நாள் குறிக்கப்பட்டிருக்கிறதென்றும், அதற்கான ஆயத்தங்கள் தொடங்குவதற்கு உத்தரவுகள் இட்டாயிற்று என்றும் சொல்லி பேச்சை மடித்துக் கொண்டாள். நொந்து கனத்த இதயத்தோடு பாயி வீடு திரும்பினாள். அவளுக்கு உற்ற மனிதரான சாரதாவும் ரகோஜியும் தன் மனநிலையைப் புரிந்து கொள்வார்கள் என்று எதிர்பார்த்தாள். ஆனால் அவர்களோ அந்தச் செய்தியைக் கேட்டதும் ஆனந்த பரவசராகி அவளை மனமார வாழ்த்தினார்கள். இப்படிக் கணவன் கிடைப்பதற்குக் கொடுத்து வைத்திருக்க வேண்டுமே என்று அவர்கள் நினைத்தார்கள்.

அவர்தான் அடுத்த பிரதானர் என்று எல்லாரும்

சொல்லுகிறார்கள். அவர் தம்பி அவர் இடத்தில் திவானாகிவிடுவாராம். இப்படிக் கணவன் யாருக்குக் கிடைக்கும். ஆனால் எங்கள் பாயி இதற்கும், இதற்கு மேலும் தகுதியுடையவள்' என்றார் ஹவில்தார். சாரதாவோ மகிழ்ச்சிக் கடலில் ஆழ்ந்து விட்டாள்.

'வயதான புருஷர்கள் வயதில் குறைந்த இளையதாரத்திடம் பிரியத்தைச் சொரிவார்கள் என்று கேள்விப்பட்டிருக்கிறோம். அவள் கணவர் பிரதான்ஜியாகிவிட்டால் எங்கள் பாயி மோகமாய் செல்வாக்கோடு வாழ்வாள். அவள் இந்த ஏழைகளை மறக்காமலிருக்க வேண்டும். நம்ம பெரிய எசமானர் கூட பிரதான்ஜி ஆகவில்லை. உங்களுக்குத் தெரியுமோ ஹவில்தார்ஜி, திவானின் முதல் தாரத்திடம் அரை லட்சத்துக்கோ, ஒரு லட்சத்துக்கோ நகை இருந்ததாமே. அதெல்லாம் இனி நம்ம பாயிக்குத்தான். மகராசியாய் வாழ்வாயம்மா. சீக்கிரமே ஆண் குழந்தை பிறக்கட்டும். உன் ஆஸ்தியையும் அவர் ஆஸ்தியையும் ஆட்சி செய்து மகாராஜாவுக்கு அடுத்த படியாய் இருக்கட்டும்' என்று ஆசீர்வதித்தாள். இந்த வாழ்த்துக்களைக் கேட்டதும் அந்த அபலையின் இதயம் மேலும் பளுவடைந்தது. மாமியைப் பார்க்க வருபவர்கள் அவள் காதுபட பேசிக்கொண்ட விஷயமெல்லாம் நினைவுக்கு வந்தது. திவான் தமது விதவை மைத்துனியோடு கொண்டுள்ள வெட்கங்கெட்ட கள்ள நட்பு, அவரைக் கைப்பொம்மையாக அவள் ஆட்டுவிக்கும் திறம், அவருடைய பிற காதல்கள் இவற்றைப்பற்றி அவர்களுக்குள் பேசிக்கொள்வதை அவள் கேட்டிருக்கிறாள். அந்தக் கதையெல்லாம் நினைவுக்கு வந்ததும், அவள் நடுங்கினாள். அவள் அவரைப் பலமுறை பார்த்திருக்கிறாள். அகாலமான நரைதிரையுடன் கூடிய காமாதூரமான அவர் முகம் அவளுக்கு வெறுப்பை விளைவித்தது. துக்கம் நிறைந்திருந்த இதயத்தில் இப்பொழுது அருவருப்பும் சேர்ந்து கொண்டது. ஆனால் இந்த மணத்தை நிறுத்துவதற்கு என்ன செய்யமுடியும்? தன் பாதுகாவலரும், அரசருமான மகாராஜாவிடம் மாத்திரமே வேண்டிக்கொள்ளலாம். நிதானமாக ஆலோசனை செய்த பின்னர் அவருக்கு ஒரு நீண்ட கடிதம் எழுதினாள். இந்தத் திருமண ஏற்பாடு தனக்குக் கவலையளிப்பதால் அதிலிருந்து தன்னை விடுவிக்குமாறு, தன் பாட்டனார்மீது அவர் கொண்டிருந்த அன்பு கலந்த மரியாதையினிமித்தம் மன்றாடிக் கேட்டுக்கொண்டிருந்தாள்.

மறுநாள் அரசி அவளை அழைப்பித்தாள். கடிதத்தில் வெளியாகியிருந்த அவளுடைய அறிவையும் திறனையும் அரசரும் அவளும் வியந்து பாராட்டியதாகவும், இந்தத் திருமணம் அவளுடைய பாட்டனார் வெளியிட்ட விருப்பப்படியேதான் ஏற்பாடாகிறதென்றும், அமாத்யாவும் திவானும் அப்படிச் சொன்னதாக உறுதி கூறுகிறார்களென்றும், அவளுடைய பாதுகாவலரான அரசர் அந்த விருப்பத்தை மாத்திரமே நிறைவேற்றி வைப்பதாகவும் கூறினாள். பாபாஜி அவ்வாறு செய்ய நினைத்திருக்கவே மாட்டாரென்றும், அவருக்கு திவான் மீதும் அவர் தம்பிமீதும் வெறுப்பு உண்டு என்று தனக்குத் தெரியுமென்றும் பரிதாபமாக அழுது கெஞ்சினாள்.

ஆனால் ஒரு பயனுமில்லை. அவள் ஏட்டுப் படிப்பில் தேர்ச்சியடைந்து இருந்தாலும், இந்த மாதிரி விஷயங்களைப் புரிந்து கொள்ளவும் நிதானிக்கவும் இயலாது என்று சொல்லிவிட்டார்கள். அவள் மேலும் மறுக்க முயன்றபோதெல்லாம், அவர்கள் மனதில் அவள் அகம்பாவமும் துணிவும் மிக்கவள், தாத்தா கொடுத்த செல்லத்தாலும், ஏட்டுப்படிப்பாலும் கெட்டுவிட்டாள் என்னும் எண்ணமே உண்டாகியது. பெரியவர்கள் அவளுக்கு நலமானதைத் தான் செய்வார்கள், அவர்கள் சொற்படியே நடக்கவேண்டும் என்று கடுமையாகப் பேசி அவளை வீட்டுக்கு அனுப்பி வைத்தார்கள். மனதில் இனந்தெரியாத பயங்கள் சூழ, மனச்சோர்வுடன் திரும்பினாள் கிளாவரிந்தா.

குறித்த நாளில் அரண்மனையிலிருந்து சிங்காரப் பல்லக்கு ஒன்று அவள் வீட்டில் வந்து நின்றது. அரசி அன்பளிப்பாக அனுப்பியிருந்த விலையுயர்ந்த பகட்டான சரிகைப் பட்டை அவளுக்கு உடுத்தி, மாப்பிள்ளை அனுப்பியிருந்த வைர நகைகளைப் பூட்டி, ஆடம்பரமாகத் திவானின் வீட்டுக்கு அழைத்துச் சென்றார்கள். அங்கு அக்கினி சாட்சியாக புகழ்பெற்ற சோதிடர் திவான் ராமண்ணா பண்டிதருக்கும் கிளாவிருந்தாபாயிக்கும் திருமணச் சடங்கு நடந்தேறியது. அரசர் தமது மந்திரிகளோடும் உல்லாசப் பரிவாரங்களோடும் வருகை தந்தார். ஆயிரக்கணக்கான பிராமணர்கள் சம்பிரமாகச் சாப்பிட்டுவிட்டு திவானையும் மணப் பெண்ணையும் ஆசீர்வாதம் செய்தார்கள்.

இசையும், நடனமும், விருந்தும் கொண்டாட்டமும் ஐந்து நாட்கள் நீடித்தன. எல்லோரும் உல்லாசமாகப் பொழுது போக்கினார்கள். இந்தக் கோலாகலத்தின் நடுவில் மணப் பெண்ணின் சின்னஞ்சிறு இதயமோ பளுதாங்காமல் வேதனையுற்றது.

இன்னொரு இளநெஞ்சமும் பச்சாதாபத்தில் கொதித்துக் கொண்டிருந்தது. மணப்பெண்ணின் கயாம் கவிக்க இனிய முகத்தைக் கண்டு பரவசமானபோதெல்லாம், சோதிட சாத்திரத்தை மனமாரச் சபித்தான் அவன். அமாத்யாவின் மகனான மாதவராவ்தான் அவன். இருபது வயது நிரம்பாத அழகிய வாலிபன். விளையாட்டு வீரன். இசைக் கலைஞன். மத்தளம் அடிப்பதில் தேர்ச்சியடைந்திருந்ததால் நந்தி என்று பெயரும் பெற்றிருந்தான். இப்படிப்பட்ட அழகான பெண்ணை இழந்துவிட்டோமே என்று நீண்ட சோகப் பெருமூச்சு விட்டுக்கொண்டிருந்தான் அவன். இந்த மணத்தின்மூலம் முறைக்கு அவள் அவனுக்குத் தாயாகின்றாள்; ஆகவே இந்த எண்ணங்கள் எல்லாம் அதிகப்படி பாபகரமானவை என்பதை அவன் சிந்தித்ததாகத் தெரியவில்லை.

திவானோ மட்டற்ற மகிழ்ச்சியும் பெருமிதமும் கொண்டவராகக் காணப்பட்டார். கல்வியில் சிறந்த அழகிய மனைவியை அடைந்துவிட்டதினாலா? அல்லது அவள் வயிற்றில் தனக்கு ஆண் குழந்தை பிறந்து தன் பாப ஆத்மாவைக் கரையேற்றி விடும் என்பதினாலா? அல்லது இந்த அதிருஷ்டத் திருப்பத்தினால் அவர் ஆஸ்தி இருமடங்கு, மும்மடங்கு பெருகுவதினாலா? அல்லது தன் மைத்துனியின் வெட்கங்கெட்ட ஆதிக்கத்திலிருந்து விடுபட்டு, அவள் ஆட்சியிலிருந்த இதயத்தில் ஆஹா எப்படிப்பட்ட இதயம் அது இதோ தமது அழுக்கு முரட்டுக் கையால் அழுத்தி இரகசியமாகக் கிசு கிசு மூட்டுகிறாரே அந்த நடுங்கும் சிறு கரத்தின் சொந்தக்காரியான அழகியைத் தன் இதயராணியாக்கப் போகின்ற மகிழ்ச்சியினாலா? யாரே சொல்ல முடியும்?

**தொடரும் ...**

# ஆதி திருவார்த்தை

## - விளக்கம்.



சங்கை. சை. நோவா சாஸ்திரியார்,
தஞ்சாவூர்.

தஞ்சை வேதநாயகம் சாஸ்திரியார் அவர்களால் இயற்றப்பட்ட இந்த கீர்த்தனை, ஞானப்பதக் கீர்த்தனம் என்ற வேதநாயகம் சாஸ்திரியார் கீர்த்தனை பாடல் தொகுப்பு நூல் II - ல் (முதற் தொகுப்பு தொடர்ச்சி) 411 - வது கீர்த்தனையாக உள்ளது.

கிறிஸ்தவ இலக்கியச் சங்கம் (CLS) வெளியிட்டுள்ள கிறிஸ்தவ கீர்த்தனைகள் நூலில் 21 - வது கீர்த்தனையாக இடம்பெற்றுள்ளது.

இந்த கீர்த்தனையை கிறிஸ்து பிறப்பு பண்டிகையின் போது காலம் காலமாக பாடி வருகிறோம். ஆனால் அதின் பொருள் விளங்க பாடியது என்பது கேள்வி குறியே! ஒருவேளை முந்தைய தலைமுறையினர் பொருள் உணர்ந்தும் அல்லது பாடி பழகியதினாலும் ஒருவகை பொருளை அறிந்திருக்கலாம். ஆனால் இன்றைய தலைமுறை அதை ஓர் இசைப் பாடலாக மட்டுமே அறிவர். சமீபத்தில் சிலர் இப்பாடலை எளிமையான சொற்களாக்கி பாடுவதாக எண்ணி புதிய சொற்களைப் பதிந்து பாடியுள்ளனர். அவர்களுடைய முயற்சி பொருள் விளங்க வேண்டும் என்பதாக இருக்கலாம். ஆனால் பழங்கீர்த்தனைகளுக்கு அவ்விதம் சொல்லை மாற்றி பயன்படுத்துவது தவறு. அது இலக்கிய மரபிலும், இறையியல் அடிப்படையிலும் பிழை, தவறு. மாத்திரம் அல்ல, தமிழில் ஒரு சொல் பல பொருள் உடையது என்பதை அறிந்திருக்க வேண்டியது அவசியம். தவறான அவ்வகை சொல் மாற்றும் முயற்சி, பாடலை சிதைப்பதோடு கவிஞரின் நோக்கத்தைக் குலைத்திடும். இங்கே இந்த பொருள் விளக்கத்திலும் குறை காணப்படலாம். ஆனால் மூலக் கவியை முழுமையாக பதிந்து, சொற்பொருள் கூறி, திருமறை கருத்தை முதன்மைப்படுத்தி பொருள் கூற விளைந்தேன் என்பதை இதை படிப்போர் அறிய விரும்புகிறேன்.

**பல்லவி**

ஆதி திருவார்த்தை திவ்விய
அற்புத பாலனாகப் பிறந்தார்
ஆதன் தன் பாவத்தின் சாபத்தைத் தீர்த்திட
ஆதிரை யோரை யீடேற்றிட

**அனுபல்லவி**

மாசற்ற ஜோதி திரித்துவத் தோர் வஸ்து
மரி வயிற்றில் கெர்ப்பந் தரித்து
மகிமையை மறந்து தமை வெறுத்து
மனுக் குமாரன் வேஷமாய்

உன்னத (அ)கஞ்சீர் முகஞ்சீர் வாசகி
மின்னுஞ்சீர் வாசகி மேனி நிறமெழும்
உன்னத காதலும் பொருந்தவே
சர்வ நன்மைச் சொரூபனார் ரஞ்சிதனார்

தாம், தாம், தன்னர வன்னர
தீம், தீம், தீமை யகற்றிட
சங்கிர்த சங்கிர்த, சங்கிர்த சந்தோ
ஷம் மென சோபனம் பாடவே

இங்கிர்த இங்கிர்த இங்கிர்த நமது
இருதயத்திலும் எங்கும் நிறைந்திட.

**சரணங்கள்**

1. ஆ தாம் ஓதி ஏவின ஆபிரகாம் விசுவாச வித்து
யூதர் சிம்மாசனத் தாளுகைச் செங்கோல்
ஈசாய் வங்கிஷத்தானு தித்தார். --- மாசற்ற....

2. பூலோகர் பாவவி மோசனர் பூரண கிருபையின் வாசனர்
மேலோக ராஜாதி ராஜன் சிம்மாசன்
மேன்மை மகிமைப் பிரதாபன் வந்தார். --- மாசற்ற....

3. அல்லேலூயா சங்கீர்த்தனம் ஆனந்த கீதங்கள் பாடவே
அல்லைகள் தொல்லைகள் எல்லாம் நீங்கிட
அற்புதன் மெய்ப் பரன் தற்பரனார். --- மாசற்ற....

**வே.சா. - வின் குறிப்பு :-**

1. தன்னர - தனது மனுட தன்மையால்
2. வன்னர - வம்பு மிகும் மனித தன்மை
3. தீம் - கொடிய
4. ஆ, தாம் = ஆ - பெரிய, தாம்-தாமே இருப்பவர். (யாத்திராகமம் 3 : 14.)
5. ஆபிரகாம் விசுவாச வித்து (கலாத்தியர் 3 : 16.)

**சொற்பொருள் :**

**பல்லவி**

× திரு - தெய்வீகம், மேன்மை

× திவ்வியம் - இனிமை, மேன்மை,
× ஆதன் - ஆதாம்
× ஆதி - தொடக்கம்
× இரையோர் - பூலோகத்தார்
× ஈடேற்றம் - இரட்சிப்பு, உய்வு, கடைத் தேற்றம்

**அனுபல்லவி**

× திரித்துவத்து ஓர் வஸ்து - மூவரில் ஒருவர் (திரித்துவம்)
× உன்னத கஞ்சீர் - உன்னத அகஞ் சீர் - சீர் பொருந்திய உன்னத உள்ளம்
× முகஞ்சீர் - சீரான முகம்
× வாசகி - ஈர்க்கும் தன்மை
× மின்னுஞ்சீர் - மின்னுதல் - சீரான ஒளிர்வு
× நிறமெழும் - நிறம் எழும் - நிறம் ஏழும் - ஏழு வகை நிறங்கள்
× சொரூபன் - உருவம் உள்ள கடவுள்
× ரஞ்சிதனார் - இரஞ்சிதம் - பிரியமானவர்
× தாம், தாம் - எல்லாமும் தாம் தான் என்ற ஆணவம்
× தன்னர - தனது மனுட தன்மையால் (வே.சா. குறிப்பு)
× வன்னர - வம்பு மிகும் மனித தன்மை (வே.சா. குறிப்பு)
× தீம் - கொடிய (வே.சா. குறிப்பு)
× சங்கிர்த - சங்கீதம், துதி வாழ்த்து
× சோபனம் - வாழ்த்து
× இங்கிர்த - இங்கிதம் - இனிமை

**சரணங்கள்**

× ஆதாம் = ஆ + தாம் (வே.சா. குறிப்பு)
× ஆ - பெரிய (வே.சா. குறிப்பு)
× தாம் - தாமே இருப்பவர். (யாத்திராகமம் 3 : 14.) (வே.சா. குறிப்பு)
× ஓதி ஏவின - கற்பித்து சொல்லிய
× விசுவாச வித்து - விசுவாசத்தின் விதை / வேர். (கலாத்தியர் 3 : 16.) (வே.சா. குறிப்பு)
× சிம்மாசனம் - சிங்காசனம் - அரியணை - அரசன் இருக்கை
× ஈசாய் - தாவீதின் தந்தை (ஏசாயா 11 : 1., ரோமர் 15 : 12.)
× வங்கிஷம் - வமிசம் - வம்சம் - சந்ததி
× விமோசனர் - நீக்குபவர்
× பூரண - நிறைவான
× வாசனர் - வசிப்பவர் - இருப்பவர்
× சிம்மாசனர் - சிங்காசனத்தில் இருப்பவர்
× பிரதாபன் - பெருமைக்குரியவர், புகழப்படதக்கவர், ஒளியாய் இருப்பவர்
× சங்கீர்த்தனம் - புகழ் செய்தல், துதி செய்தல், புகழ்ச்சி
× அல்லைகள் - மிகுதியான
× தற்பரன் - தாமாக இருப்பவர், தனக்கு நிகர் இல்லாதவர், கடவுள்

**பொருள் விளக்கம் :**

**பல்லவி**

ஆதியில் வார்த்தையான கடவுள் மேன்மை மிகுந்த அற்புத பாலகனாக பிறந்தார். ஆதாமின் பாவத்தினால் விளைந்த சாபத்தை தீர்த்திட, ஆதிமுதற்கொண்டிருந்த பூலோகததாரை இரட்ச்சித்திட....

**அனுபல்லவி**

குற்றமற்றவராய் ஒளியானவராய் மும்மையில் ஒருவராய், மரியாளின் வயிற்றில் கர்ப்பந்தரித்து, மகிமையை மறந்து, சுயத்தை வெறுத்து, மனித மகனாக வேஷம் கொண்டார்.

உன்னதத்தின் சீர் கொண்ட மனதையும், அழகு நிறைந்த முகத்தையும், மின்னும் ஒளியுடன் வசீகரிக்க கூடிய உருவில் ஏழு நிறங்களும் பொருந்தி, மேலான அன்புடையவராய் எல்லா நன்மைகளுக்கும் காரண உருவம் கொண்ட பிரியமுள்ள கடவுளானார்.

தான், தனது என்ற வம்பு மிகும் மனித தன்மையை, பரமன் தனது மனித தன்மையால் நீக்கி, மகா கொடிய தீமை அகற்றினார் என்று வாழ்த்தி பல சங்கீதங்களை இசையில் அமைத்து சந்தோஷமாக பாடுவோம்.

இனிது இனிது என இனிமை பெருகி நமது இருதயத்திலும் எங்கும் நிறைந்திட ..... ஆதியில் வார்த்தையான கடவுள் மேன்மை மிகுந்த அற்புத பாலகனாக பிறந்தார்.

**சரணங்கள்**

1. சர்வ வல்லமை பொருந்தினவரும் இருக்கிறேன் என்று கற்பித்து சொல்லிய (யாத்திராகமம் 3 : 14.), ஆபிரகாமின் விசுவாச விதையானவர் (கலாத்தியர் 3 : 16.) யூதர் சிம்மாசனத்தை ஆளுகை செய்யும் அதிகாரம் மிக்க அரசராக, ஈசாய் (தாவீதின் தந்தை) வம்சத்தில் (ஏசாயா 11 : 1., ரோமர் 15 : 12.) வந்து பிறந்தார்.

2. பூலோகத்தார் அனைவருடைய பாவங்களை நீக்குபவர், நிறைவான கிருபையுள்ளவர், மோட்சத்தில் ராஜாதி ராஜாவாக அமர்ந்திருப்பவர், மேன்மை நிறைந்த மகிமை பொருந்திய புகழுக்கு உரியவர் வந்தார்.

3. பரமனுக்கு புகழ் மாலைகள் சூடி ஆனந்த கீதங்கள் பாடுவோம். மிகுதியான தொல்லைகள் எல்லாம் நீங்கிட, அற்புதனாகிய பராபரன் - தாமாக இருந்தவரும் இருக்கிறவரும் வருகிறவருமாயிருக்கிறார்.

# எல்லீசர்

## என்னும் நல்லறிஞர்

**செல்வகுமார்**



ஆங்கில நாட்டிலே தோன்றினார் எல்லீசர் என்னும் நல்லறிஞர். இந்திய துரைத்தனத்திற்குரிய கலைகளைக் கற்றுத் தேறினார். அவர் சிறந்த மதிநலம் வாய்ந்தவர். எப்பொருளையும் ஆராய்ந்து மெய்ப்பொருள் காணும் மேதை.

அரசியலாளர் அவரைச் சென்னை நிலவரி மன்றத்தின் செயலாளராக முதலில் நியமித்தனர். எட்டாண்டுகள் அவர் அம்மன்றத்தில் சிறந்த பணி புரிந்தார். அக்காலத்தில் தென்னாட்டுக் காணியாட்சி முறைகளைக் கருத்தூன்றிக் கற்றார். காணியாளருடைய கடமையையும் உரிமையையும் தெள்ளத்தெளியச் சென்னை அரசியலாளருக்கு உணர்த்தினார். மிராசு முறையைக் குறித்து அவர் எழுதிய நூல் இன்றும் ஆதாரமாகக் கொள்ளப்படுகின்றது.

பின்னர், பத்தாண்டுகள் எல்லீசர் சென்னைக் கலெக்டராக இருந்தார். அப்போது இந்திய நாட்டு மொழிகளைக் கற்றுணர ஆசைப்பட்டார்; நல்லாசிரியர்களின் உதவி பெற்று வடமொழியும் தென்மொழியும் வருந்திக் கற்றார். தென்னாட்டில் வழங்கும் மொழிகளுள் தமிழ் மொழியின் செம்மையும் தொன்மையும் அவர் உள்ளத்தைக் கவர்ந்தன. சென்னையில் சிறந்த தமிழ்ப் புலவர்களாக விளங்கிய சாமிநாதபிள்ளை, இராமச்சந்திரன் கவிராயர் முதலியோருடன் ஏட்டுச் சுவடிகளில் அமைந்த தமிழ் நூல்களை நாள் தோறும் மெய்வருத்தம் பாராது கற்றார். பழந்தமிழின் பண்புகளைப் பளிங்குபோற்காட்டும் திருக்குறளை மேலை நாட்டாரும் அறிந்து பயனுற வேண்டும் என்பது அவரது பேராசை. அந்நோக்கத்தைக் கொண்டு திருக்குறளுக்கு ஆங்கிலத்தில் விளக்கமான விரிவுரை யொன்று எழுதத் தொடங்கினார். ஆனால் அப்பணி முற்றுப்பெறாது போயிற்று. அடியும் முடியுமின்றி அது அரைகுறையாக அச்சிடப்பட்டிருக்கின்றது. அந்நூல் ஒன்றே எல்லீசரது தமிழ்ப் புலமைக்கு அழியாத நினைவுச் சின்னமாக நிலவுகின்றது.

அந்நூலில் திருக்குறட்பாக்களின் ஆங்கில மொழி பெயர்ப்பை முன்னே தருகின்றார் எல்லீசர். பரிமேலழகர் உரையைப் பின்பற்றிய விளக்கவுரை பின்னே வருகின்றது. அதைத் தொடர்ந்து சங்கத்தமிழ் இலக்கியங்களிலிருந்தும், பிற்காலத் தமிழ் நூல்களிலிருந்தும் பொருத்தமான மேற்கோள்கள் ஆங்கில மொழிபெயர்ப்புடன் காட்டப்படுகின்றன. இறுதியாக இலக்கணக்குறிப்பு எழுதப்பட்டுள்ளது. தொல்காப்பியம், நன்னூல், தொன்னூல் முதலிய இலக்கணங்கள் நன்கு எடுத்தாளப்படுகின்றன.

எல்லீசரது புலமைத் திறத்தையும், நடுவு நிலைமையையும் அறிந்து கொள்வதற்கு ஒரு சான்று போதியதாகும்.

**"அறவாழி அந்தணன் தாள்சேர்ந்தார்க் கல்லால்**
**பிறவாழி நீந்தல் அரிது."**

என்னும் குறளில் உள்ள அறவாழி, பிறவாழி என்னும் பதங்களை விளக்குகின்றார் எல்லீசர். பரிமேலழகர் அறவாழி என்பதற்கு 'அறக்கடல்' என்று பொருள் உரைத்து, 'பலவேறு வகைப்பட்ட அறங்கள் எல்லாவற்றையும் தனக்கு வடிவாக உடையனாகலின் 'அறவாழி அந்தணன்' என்பது கடவுளைக் குறிப்பதாயிற்று' என விளக்கம் கூறியுள்ளார். இக்கருத்தை எல்லீசர் ஏற்றுக்கொண்டார்; ஆயினும் சமண சமயத்தார் கூறும் உரையையும் விரிவாகத் தருகின்றார். அறவாழி என்னும் பதத்திற்குத் தருமச் சக்கரம் என்று பொருள் கூறுவர் சமணப்புலவர்கள். பழைய நிகண்டுகளில் 'அறவாழி அந்தணன்' என்னும் பெயர் அருக தேவனுக்கே உரியதாக ஆளப்பட்டிருத்தலை எடுத்துக் காட்டி எல்லீசர் ஆராய்ச்சிக்கு ஒரு தூண்டுகோல் அளிக்கின்றார்.

இனிப் பிறவாழி என்னும் சொல்லுக்குப் "பொருட்கடலும் இன்பக் கடலும்" என்று உரை கூறினார் பரிமேலழகர். அக்கருத்தை ஆதரித்து ஆங்கிலத்தில் சில அறிஞர் மொழிபெயர்த்துள்ளார்கள், இன்னும், பிறவாழி என்பதனைப் பிறவு ஆழி எனப் பிரித்துப் பிறப்பாகிய கடல் என்று பொருள் கொள்வாரும் உளர். எல்லீசர் வேறு ஒரு பொருள் கூறுகின்றார். அறமே உருவாய இறைவனை அறவாழி என்றமையால், அறத்தின் மாறுபட்ட பாவக்கடல் 'பிறவாழி என்னும் பதத்தால் குறிக்கப்பட்டது என்பது அவர் கருத்து'. இவ்வாறு சில குறட்பாக்களுக்குப் புதியவுரை கண்டுள்ளார் எல்லீசர்.

தென்னாட்டு மொழிகளில் துரைத்தனத்தார்க்கு முறையாகப் பயிற்சியளிக்கும் வண்ணம் சென்னை அரசாங்கத்தார் கல்விச்சங்கம் ஒன்று நிறுவினர். அச்சங்கத்தை அமைப்பதற்குப் பெருமுயற்சி செய்தவர் எல்லீசரேயாவர். அதனை நேரில் அறிந்த தமிழறிஞர் ஒருவர் அவர் பெருமையை மனமாரப் புகழ்ந்துள்ளார்.

‘கொழு கொம்பில்லாது அலைகொடி போலும், கொழுநன் இல்லாக் குலக்கொடி போலும், ஆதாரமின்றித் தேய்ந்து கிடந்த ஆரியம், தெலுங்கு, மலையாளம் முதலிய இத்தேச மொழிகளில் தேர்ந்து, தமிழ் இலக்கண இலக்கியத்தை ஒருங்குணர்ந்து, சென்னையில் கல்விச் சங்கம் நாட்டுதற்க்கு வேண்டும் முயற்சி செய்தமைத்து, அப்பல்கலைச் சங்கத்தைப் பாண்டியனைப் போலும் பாதுகாத்தார் எல்லீசுதுரை’ என்பது அவர் அளித்த பாராட்டுரை.

அக் கல்விச் சங்கத்தின் மானேசராக இருந்த முத்துசாமிப் பிள்ளை என்பவர் சிறந்த தமிழ் அறிஞராகவும் விளங்கினார். ஏசு மதத்தின் சார்பாகத் தத்துவ போதகர், வீரமாமுனிவர், சாங்கோபாங்கர் முதலிய துறவோர் எழுதிய நூல்களை அவர் நன்கு கற்று, அவற்றில் அமைந்த கருத்து நுட்பங்களையும் கட்டுரை நயங்களையும் யாவரும் கேட்டு வியக்கும்வண்ணம் சொற்பொழிவு செய்து வந்தார். புதுச்சேரி அன்பர் ஒருவரால் சுருக்கமாக எழுதப்பட்டிருந்த குறிப்புகளை ஆதரவாகக் கொண்டு, முதன் முதல் வீரமாமுனிவரது சரித்திரத்தை விளக்கமாக எழுதி வெளியிட்டவர் அவரே. அப்பணியில் அவரை உய்த்து ஊக்கு வித்தவர் எல்லீசர்.. வீரமாமுனிவர் தொண்டு செய்த இடந்தொறும் சென்று அவர் இயற்றிய நூல்களைச் சேகரிக்கும் பணியை எல்லீசர் அவரிடம் ஒப்புவித்து, அதற்கு வேண்டிய பொருளும் தாராளமாக உதவினார். இங்ஙனம் முத்துசாமிப்பிள்ளை சேகரித்த நூல்களுள் சிறந்தது தேம்பாவணிக் காவியம்.

வீரமாமுனிவர் தாமே எழுதிய தேம்பாவணிக் கையெழுத்துச் சுவடி ஆவூர் என்ற சிற்றூரில் அகப்பட்டது; அந்நூலைக் கண்டு அகமகிழ்ந்தார் முத்துசாமிப் பிள்ளை; அச்சுவடிக்குரியவராகிய நாயக்கரை எல்லீசரிடம் அழைத்துச் சென்றார். அவர் அதனை மிக்க ஆசையோடு ஏற்றுத் தக்க விலை கொடுத்துப் பெற்றுக் கொண்டார். அருந் தமிழ்ச் சுவடிகளைச் சேகரிப்பதிலும், பாதுகாப்பதிலும் எல்லீசர் சிறந்த ஆர்வமுடையவராயிருந்தார் என்பதற்கு இது ஒன்றே போதிய சான்றாகும்.

எல்லீசர் தமிழ்ச் செய்யுளும் இயற்றியதாகத் தெரிகின்றது. அவற்றுள் நமக்குக் கிடைத்திருப்பது நமசிவாயப் பாட்டேயாகும். நமசிவாயத்தைப் பற்றி ஐந்து பாட்டுப் பாடியுள்ளார் எல்லீசர்.

‘சர்வ வல்லமையுள்ள தெய்வமே! பேரானந்த வடிவாய பெருமானே! பரந்த உலகமெல்லாம் பற்றியாளும் பரமனே! இம்மண்ணுல கத்தையாளும் சிற்றரசர்கள் தம் குடிகளைக் கண்டித்தும் தண்டித்தும் வரிப்பணம் வாங்குவர். ஆனால் அரசர்க்கெல்லாம் அரசனாய் விளங்கும் நீயோ ஒன்றையும் திறையாகப் பெறுதல் இல்லை. ஆதலால் வாக்காலே திறையளக்கும் வழக்கத்தை விட்டு, என் உள்ளத்தில் ஊறி எழுகின்ற அன்பினையே உனது திருவடியிற் காணிக்கையாகச் சொரிகின்றேன்’ என்ற கருத்தையமைத்து எல்லீசர் பாடினார்.

**‘நமசிவாய என்னும் ஐந்தெழுத்து சைவ சமயத்தார் போற்றும் தாரக மந்திரம் ஆயிற்றே! அதனை எவ்வாறு கிறிஸ்தவராகிய எல்லீசர் எடுத்தாளலாம்’** என்ற கேள்வி எழுந்தது. அதற்கு விடை கூறும் வாயிலாக முத்துசாமிப்பிள்ளை நமசிவாயப் பாட்டுக்கு விருத்தியுரை யொன்று இயற்றிய எல்லீசர் கருத்தை விளக்கிக் காட்டினார் என்பர். **‘என்றென்றும் நிற்கும் ஏக கடவுட்கு, நன்றென்று இதோ புரிந்தேன் நமஸ்காரம்’** என்பதே நமசிவாய என்ற சொல்லின் பொருள் என்பது முத்துசாமியார் கொள்கை. சிவம் என்ற சொல்லுக்கு நன்மை என்னும் பொருள் உண்டு. அது பற்றியே ‘நமச்சிவாயவே நன்னெறி காட்டுமே’ என்ற திருவாக்கு எழுந்தது. அருக தேவனைச் ‘சிவகதி நாயகன்’ என்று சிலப்பதிகாரம் குறிக்கின்றது. நற்கதியளிக்கும் நாயகனையே சிவகதிநாயகன் என்றார் இளங்கோவடிகள். எனவே, எந்நலமும் தரும் இறைவனையே சிவ நாமத்தால் எல்லீசரும் குறித்தார் என்பது இனிது விளங்குவதாகும்.

தமிழ் மொழியின் செம்மையையும் தொன்மையையும் குறித்துப் பல ஆராய்ச்சிக் குறிப்புகள் எழுதி வைத்திருந்தார் எல்லீசர். ஆயினும் அவற்றை முறையாக வகுத்தும் தொகுத்தும் நூல் வடிவத்தில் எழுதுமுன்னமே முத்தமிழ் வளர்த்த மதுரைமா நகரைக் கண்ணாரக் கண்டுவர விரும்பினார். அரசியலாரிடம் விடுமுறை பெற்று மதுரைக்குச் சென்றார். அங்கு கலெக்டராயிருந்த பெற்றி என்பவர் மனையில் விருந்தினராக அமர்ந்து, மதுரை மாநகரைப் பன்முறை சுற்றிப் பார்த்தார். “பாண்டி மன்னர் அரசு வீற்றிருந்து அருந் தமிழை ஆதரித்த நகரம் இதுவன்றோ ? கலை பயில்தெளிவும், கட்டுரை வன்மையும் வாய்ந்த புலவர் பல்லாயிரவர் சங்கத்தின் வாயிலாகத் தமிழ் வளர்த்த தலை நகரம் இதுவன்றோ ?

**“புலவர் நாவிற் பொருந்திய பூங்கொடி**
**வையை என்ற பொய்யாக் குலக்கொடி”**

என்று இளங்கோவடிகள் பாடிய ஆற்றின் கரையில் அமைந்த அழகிய நகரம் இது வன்றோ?” என்று எண்ணி எண்ணி விம்மித முற்றார்; கடைச் சங்கப் புலவர்களில் தலைசிறந்து விளங்கிய நக்கீரரைத் தனிக் கோயிலில் அமைத்து வழிபடும் மதுரைத் தமிழரது ஆர்வத்தைப் போற்றினார்.

இங்ஙனம் மதுரையம்பதியைக் கண்டு புதியதோர் ஊக்கமுற்ற எல்லீசர் ஒரு நாள் இராமநாதபுரம் என்னும் மூதூரைக் காணச் சென்றார். அங்கு தாயுமானவர் சமாதி அடைந்த இடத்தைக் கண்டு நெஞ்சுருகி நின்றார். “இன்றைக்கிருந் தாரை நாளைக்கிருப்பர் என்றெண்ணவோ திடமில்லையே” என்ற பாட்டை உருக்கமாகப் பாடினார். பின்பு அவ்வூரில் காணத்தக்க இடங்களை எல்லாம் கண்டு, நண்பகலில் தம் இருப்பிடம் போந்து உணவருந்தினார். சிறிது நேரத்தில் அவ்வுணவிலே கலந்திருந்த நஞ்சு அவர் குடலை அறுப்பதாயிற்று. மாற்றுக் கொடுக்கவல்ல மருத்துவர் யாவரும் அவ்வூரில் அகப்படவில்லை. எல்லீசர் துயருற்றுத் துடித்து உயிர் துறந்தார்.

சென்னையிலும் மதுரையிலும் இருந்த அவர் உடைமைகளை அரசாங்கத்தார் நியமித்த அதிகாரி ஒருவர் ஏலமிட்டார். பெற்றியின் பங்களாவில் எல்லீசரின் ஆராய்ச்சிக் குறிப்பமைந்த பொதிகள் ஓர் அறையில் குவிந்திருந்தன. அத்தமிழ்ப் பொதிகளை அதிகாரி ஏலம் கூறினார். பாண்டியர் தமிழ் வளர்த்த பழம்பதியில் அவற்றைத் தீண்டுவார் யாருமில்லை. பெற்றியின் பங்களாவில் அடுப்பாரும் எடுப்பாருமின்றி அவலமாய்க் கிடந்த ஆராய்ச்சித் தாள்களை அவர் சேவகர் பலநாள் அடுப்பெரித்து இடத்தைக் காலி செய்தாராம். “யாரறிவார் தமிழ் அருமை…………………” “மதுரை மூதூர் நீர் அறியும் நெருப்பறியும்” என்று பாடிய புலவர் வாக்குப்பலித்ததே!



# கிறிஸ்தவம் வளர்த்த தமிழ்

**H. ஜாண் சாமுவேல்,**
**பண்டாரஞ்செட்டிவிளை**

**முன்னுரை**

கிறிஸ்தவத்தை அறிவிக்க வந்தவர்கள் ஏன் தமிழ் மீது அத்தனைக் காதல் கொண்டிருக்க வேண்டும் என்பது பெரிய கேள்வியே. இறைவனை அறிவிக்க வந்தவர்கள் இறைவன் மீது கொண்ட பற்றினை போன்று தமிழ் மீது கொண்ட பற்று அதிகம் எனலாம். இந்தியாவின் சுதந்திரத்திற்கு கிறிஸ்தவர்கள் என்ன பங்காற்றினார்கள் என்ற கேள்வி எப்பொழுதும் பலசமய உரையாடலில் கேட்கப்படும் கேள்வி. பதில் பலமாக இருந்தாலும் திருப்தி அடையாதவர்களாக ஒன்றுமில்லை என்று தான் கூறுவார்கள். ஆனால் கிறிஸ்தவர்கள் தமிழுக்கு ஆற்றின தொண்டு என்று கூறும் போது இந்த உண்மையை யாரும் மறைக்க முடியாது.

**மொழி கண்ட முன்னேற்றம்**

வெளிநாட்டவர் மட்டுமின்றி தமிழ் மண்ணை சார்ந்த கிறித்தவர்களும் தமிழுக்கு ஆற்றின தொண்டு மிக அதிகமே. தமிழருக்கும் ஐரோப்பியருக்கும் ஏற்பட்ட சமய, வாணிப மற்றும் அரசியல் தொடர்புகளால் தமிழில் சில மாறுதல்களும் முன்னேற்றங்களும் ஏற்பட்டன. மயிலை சீனி. வேங்கடசாமி என்பவர் எழுதிய 'கிறிஸ்தவமும் தமிழும்' என்ற நூலில், 'தமிழ் மொழிக்கு ஏற்பட்ட மாறுதல் அல்லது வளர்ச்சி பெரும்பாலும் ஐரோப்பிய பாதிரியார்களால் உண்டானவையே', என்று கூறியிருக்கிறார்.

**மிஷனெரிகளின் மொழித் தொண்டு**

மததொண்டினையும், மொழித் தொண்டினையும் இரு கண்களாகவே மிஷனெரிமார்கள் தங்கள் வாழ்வில் கொண்டிருந்தார்கள். காரணம் யோவான் எழுதிய சுவிசேஷத்தில் ஆண்டவராகிய இயேசு கிறிஸ்துவைப் பற்றி கூறும் போது 'வார்த்தை மாம்சமாக வந்தவர்' என்று குறிப்பிடுவார். 'ஆதியிலே வார்த்தை இருந்தது. அந்த வார்த்தை தேவனிடத்திலிருந்தது, அந்த வார்த்தை தேவனாயிருந்தது.' (யோவான் 1:1). எனவே வார்த்தையின் மீது கொண்டிருக்கும் எந்த பற்றும் அது வார்த்தை மாம்சமானவருக்கு செய்யும் தொண்டே என்ற கோட்பாட்டில் மிஷனெரிமார்கள் தங்கள் மொழித் தொண்டினை ஆற்றியிருக்கலாம். தன் வரலாறு அறியாத எந்த மொழியும் தன் இனம் காக்கப்படுவதற்கு தவறியதாகவே கருதப்படும். நம் மொழி கடந்து வந்த பாதைகளை அறிவதின் மூலமாகவும், அறிவிப்பதின் மூலமாகவும் அதின் சிறப்பினை நாம் வெளியுலகத்திற்கு காண்பிக்க முடியும்

**எட்டாக் கனி - தமிழ்**

**'கல்தோன்றி மண்தோன்றா காலத்தே முன் தோன்றி மூத்தக் குடி தமிழ் குடி'** என்று தமிழின் சிறப்புகளைப் பற்றி பல நூல்கள் கூறினாலும். தமிழ் மொழியானது பாமரரும் புரிந்து கொள்ளவும், வாசிக்கவும் கூடாத மொழியாகவே பல நூற்றாண்டுகளாக இருந்தது. அக்காலங்களில் மேல் ஜாதி மக்கள் என்று அழைக்கப்படும் ஒரு சிலரால் மாத்திரமே கல்வி கற்க முடியும் மற்றவர்கள் கல்வி கற்க தகுதியில்லாதவர்கள் என்ற காலத்தில் தமிழுக்கும் மக்களுக்கும் பெரும் இடைவெளி இருந்தது. தமிழில் இலக்கியம் மட்டும் கவிதைகளாக இருக்கவில்லை, மருத்துவம், சோதிடம், இலக்கணம், இறையியல், தத்துவம், அகராதி என அனைத்தும் கவிதைகளாகவே இருந்தது. உரைநடைகளை தமிழர்கள் ஒரு பொருட்டாக எண்ணியதில்லை என்று எம். சீனிவாச அய்யங்கார் கூறுகின்றார்.

பதினெட்டாம், பத்தொன்பதாம் நூற்றாண்டுகளில் தென்னிந்தியாவில் சுற்றுப்பயணம் செய்த அபி டுபாய் என்ற கத்தோலிக்கத் துறவி 'தொன்றுதொட்டே இந்துக்களுக்குக் கவிதை மட்டுமே பழக்கமாக இருந்து வந்திருக்கிறது. கவிதை மீது அவர்களுக்கு மதிப்பு அதிகம், வேறு எந்த எழுத்துவகை மரபும் இருப்பதாகத் தெரியவில்லை. அவர்களின் பழைய நூல்களில் ஒன்று கூட உரைநடையிலோ அல்லது மக்கள் பேசும் பாமர மொழியிலோ இல்லை. அவர்களுடைய மருத்துவ நூல்கள் கூட கவிதைகளாகத்தான் இருக்கின்றன. இப்படி பாமரருக்குப் புரியாத மொழியில் எழுதிவருவது அந்தணரின் யுக்தியாகத் தெரிகிறது. அறிவுத் துறைகளில் பிற சாதியினர் புகாதிருக்கவும், அவற்றைத் தாங்கள் ஏகபோகமாக அனுபவிக்கவும், அவர்கள் கையாண்டுவருகிற பழக்கமாக இருக்கிறது இது' என்று வரலாற்றில் பதிவு செய்திருக்கின்றார். மேல் சாதியினர் மட்டுமே கல்வி கற்ற

வேண்டும் என்ற எண்ணத்தில் பிற மக்கள் கல்வி கற்க கூடாது என்ற எண்ணத்தில் இவ்வாறு ஒரு வழக்கம் இருந்து வந்திருக்கின்றது. சீகன்பால்குவின் வேதம் முதன்முறையாக 1714 இல் அச்சில் ஏற்றப்பட்டு வெளியானபோது அது 'பறையர் வேதம்' என்று அழைக்கப்பட்டது. காரணம் அதின் மொழிநடை பிராமணர்கள் பயன்படுத்தும் மொழிநடையில் இல்லாதபடி மற்றவர்களும் அறிந்துக் கொள்ளும் வகையில் மொழிபெயர்க்கப்பட்டதே ஆகும்.

**மறுமலர்ச்சி**

கிறிஸ்தவ மிஷனெரிமார்களால் தான் தமிழுக்கு புது பொலிவு கிடைக்கப்பெற்றது என்று கூறுவதில் சிறிதும் ஐயமில்லை. காரணம் இருபதாம் நூற்றாண்டுவரை தமிழில் மணிப்பிரவாள நடை என்ற நடையிலே படைப்புகள் வந்துள்ளது. மணிப்பிரவாள நடை என்பது 'கி.மு முதல் நூற்றாண்டில் சமணம் தமிழ்நாட்டிற்கு வந்தது. சமணர்கள் பிராகிருத மொழியில் இருந்த தங்கள் சமய நூல்களை, தமிழில் ஆக்க வேண்டிய அவசியம் ஏற்பட்டபோது, அதைச் சமாளிப்பது மிகக் கடினமாக இருந்து, தங்களுடைய சமயக் கருத்துக்களையும், தத்துவங்களையும் எளிதில் தமிழில் கொண்டுவர இயலாதபடியால் அவர்கள் பிராகிருதத்தையும் பின்னர் சமஸ்கிருதத்தையும் சேர்த்துப் புதிகாக ஒரு கலப்பு மொழியைச் உண்டாக்கினார்கள். இவை தான் பிற்காலங்களில் மணிப்பிரவாள நடை என்று அழைக்கப்பட்டது.

இருபதாம் நூற்றாண்டு வரை இந்நடை தான் வழக்கத்தில் இருந்தாக உரைநடை வரலாற்றுப் பக்கங்கள் கூறுகின்றன. பின்னர் மிஷனெரிகளின் ஆர்வத்தினால் தனித் தமிழ் உணர்வு உருவாகி பின்னர் திராவிட இயக்கத்தினரால் அது உச்சத்தை அடைந்தது.

மணிப்பிரவாள நடை போன்று மற்றொரு முறை தமிழ் மொழியில் இருந்தது. அது 'உரையாசிரியர் நடை' என்று அழைக்கப்பட்டது. நன்கு கற்றறிந்த பண்டிதரிடையே காணப்பட்ட நடை. உரையாசிரியர் நடையானது, பழைய காப்பியங்களுக்கு முற்காலங்களில் உரைகள் கிடையாது விளக்கங்கள் சீடனுக்கு குரு சொல்லிக்கொடுத்து பாரம்பரியமாக தலைமுறைகளுக்கு கடத்தப்பட்டு வந்தன. இவ்வாறாக வாய்மொழியாக வந்த உரைகளை எழுதுவதற்கு குருவின் சீடர்கள் ஆரம்பித்தார்கள். சுத்தமான இலக்கணத்தோடு கூட இது எழுதப்பட்டது. இந்நடை சிறப்பாகஇருந்த போதிலும் புரிவதற்குக் கடினமாக இருந்தது. இது எழுதப்பட்ட காலத்தில் பேசப்பட்ட தமிழுக்கும் எழுதப்பட்ட தமிழுக்கும் சற்றும் சம்பந்தம் இல்லாதிருந்தபடியினால் இதுவும் பாமர மக்களுக்கு புரியாத ஒரு நடையாகவே இருந்தது.

**கனம் அன்டிரீக்ஸ் (Fr. Henriaue Henriaues)**

இந்நிலையை மாற்றியவர்கள் கிறிஸ்தவர்கள், கத்தோலிக்க சமயத் தொண்டர்கள் பதினாறாம் நூற்றாண்டின் நடுவில் தமிழகம் வந்து சேர்ந்தபோது அவர்கள் தங்கள் சமய நூல்களை உரைநடையிலேயே எழுதத் தொடங்கினார்கள். நவீன உரைநடைக்கு நடைபாதை அமைத்தவர்கள் கிறிஸ்தவர்களே என்று கூறினாலும் அது மிகையாகாது. சில காலங்கள் கழித்து அன்டிரீக்ஸ் (Fr. Henrique Henriques) என்பவர் தமிழுக்கு பெரும் தொண்டாற்றினார். 1520 ல் போர்ச்சுகல்லில் யூதப் பெற்றோருக்குப் பிறந்த அன்டிரிக்ஸ் அவர்கள் இறைப்பணியாற்றுவதற்கு தன்னை அர்ப்பணித்து, 1546 ல் ரோமன் கத்தோலிக்க மிஷனெரியாக தென் இந்தியா வந்தார். பிரான்ஸ்சிஸ் சேவியர் தமிழ் நாட்டை விட்டுப் போனபின்பு அப்பகுதிகளின் பொறுப்பு அன்டிரீக்ஸ்சிடம்




வந்தது. இவர் தென்தமிழகத்தில் தூத்துக்குடி மாவட்டத்தில் அமைந்துள்ள கடற்கறை ஓரங்களில் அமைந்துள்ள புன்னக்காயல், தூத்துக்குடி, மனப்பாடு போன்ற இடங்களில் பணியாற்றினார். தமிழ் கற்று, கல்வியறிவு அதிகம் இல்லாத இப்பகுதி மக்களுக்கு, அவர்களுக்குப்பழக்கமான மொழியில் சமய நூல்கள் எழுதி அவற்றை அச்சிட்டுக் கொடுத்தார். புன்னக்காயலில் 1579 ம் ஆண்டு முதல் முதலாக அச்சுக்கூடம் அமைக்கப்பட்டது. தமிழ்மொழியின் மீது அதிக ஆர்வம் கொண்ட அன்டிரீக்கஸ், மூன்று நூல்களை இவர் மொழிப்பெயர்த்துள்ளார். 'தம்பீரான் வணக்கம்', 'கிரீசித்தியானி வணக்கம்' மற்றும் 'ஃபிளாஸ் சான்க்டோரம்' என்பவைகளே. இந்நூல் 1586 ம் ஆண்டு புன்னைக்காயலில் அச்சாகி இருக்கிறது. 1954 ல் தான் இது வத்திக்கான் நூலகத்தில் கண்டுபிடிக்கப்பட்டு 1967 ல் மறுபதிப்பு செய்திருக்கிறார்கள். தலைப்பு இல்லாததால் 'அடியார் வரலாறு' என்று பெயர் சூட்டப்பட்டு இது வெளியானது. பல நூற்றாண்டுகளுக்கு முன்னதாகவே தமிழ் மொழி அச்சுவடியில் வெளியாகுவதற்கு மிஷனெரிகளின் பங்கு மிகப் பெரியதாகவே இருந்தது.

இவரது தமிழ்நடை எளிமையானது, சரளமானது. அவர் வாழ்ந்த பகுதியின் மக்கள் பேசியும் எழுதியும் வந்த

மொழியை அடிப்படையாகக் கொண்டு தம்முடைய நூலை இவர் மொழிபெயர்த்துள்ளார். இதற்கு முன்னர் இப்படி மக்கள் பேசும் மொழியில் இலக்கியங்கள் உருவாகவில்லை என்பது உண்மை. பாமரரும் தமிழின் புகழை உணரச்செய்தவர்கள் கிறிஸ்தவர்கள் என்பது புலனாகிறது.

அன்டிரீக்ஸ் தமிழ் இலக்கணமும் தமிழ் - போர்ச்சுகீசிய அகராதியுங்கூட எழுதினார். தமிழில் முதல்முதலாக நூல்கள் அச்சேரியதும் இவரது முயற்சிதான். ஐரோப்பாவில் அச்சு வந்த (1450) அடுத்த நூற்றாண்டிலேயே தமிழிலும் வந்துவிட்டது. இந்திய மொழிகளிலே தமிழில் தான் முதன் முதலில் அச்சு வந்தது. இதனைக் கொண்டுவந்தவர்களும் கிறிஸ்தவ மிஷனெரிகள் தான். அன்டிரீக்ஸ்சின் காலத்திற்குப் பிறகு ஒரு நூற்றாண்டுகளாக அச்சு வேலை நடந்ததாக வரலாற்றுகளில் புலப்படவில்லை. அதன்பின்னர் சீகன்பால்குவின் காலத்திலேயே இது புத்துயிர் பெற்றது. அவர் புதிய ஏற்பாட்டை மொழிபெயர்த்தார். நான்கு சுவிசேஷங்களும், நடபடிகளும் மொழிப்பெயர்த்தார். இவரது மொழிப்பெயர்ப்பில் ஒவ்வொரு வசனங்களும் தனித்தனியாக அச்சிடப்பட்டிருந்தன. வசனநடை என்ற சொல்லுக்கு சொந்தக்காரர் சீகன்பால்கு என்று கூறமுடியும். அது வரை ‘வாசகம்’ என்ற சொல்லே இருந்தது. வசன நடையை தமிழுக்கு அறிமுகப்படுத்தியவர்கள் கிறிஸ்தவர்களே. இத்தாலி நாட்டைச் சேர்ந்த பெஸ்கி 1710 ல் தமிழ்நாடு வந்தார். உறங்கிக் கிடந்த தமிழ் இலக்கிய உலகைத் தட்டியெழுப்பி செயல்பட வைத்தார். தமிழில் எல்லா இலக்கிய வகைகளிலும் நூல்கள் எழுதினார். பெஸ்கி ஒரு இலக்கண மேதையாக திகழ்ந்தார். தேம்பாவணி இவர் எழுதிய நூல் ஆகும். இவர் எழுதிய ‘தொன்னூல் விளக்கம்’ என்ற நூல் இவருக்கு செந்தமிழ்த் தேசிகர் என்ற பட்டத்தைக் கொடுத்தது. கொடுந்தமிழ் இலக்கணம், பரமானந்த குருவின் கதை, தமிழ் - லத்தீன் அகராதி, வாமன் சரித்திரம், தொன்னூல் விளக்கம் போன்றவைகள் இவரின் படைப்பே.

**கனம் இராபர்ட் கால்டுவெல்**

அதன்பின்னர் கனம் கால்டுவெல் ஐயரவர்களின் வருகை தமிழ் மொழி வரலாற்றில் பெரும் மாறுதலையும், முன்னேற்றத்தையும் கொண்டுவந்தது. ‘திராவிட மொழியிலலின் தந்தை’ என்று அழைக்கப்படும் இவரது அயராத உழைப்பு திராவிட மொழிகளின் தனித்துவத்தையும் முக்கியத்துவத்தையும் உலகிற்கு காண்பித்தது. தமிழ் மொழியின் தோற்றத்தையும், வளர்ச்சியையும் தன்னுடைய ஆராய்ச்சியின் மூலமாக நன்கு அறிந்த கனம் இராபர்ட் கால்டுவெல் ஐயரவர்கள் ‘திராவிட மொழியின் ஒப்பிலக்கணம்’ என்ற நூல் ஒன்றினை எழுதி வெளியிட்டார்கள். இந்நூலின் மூலம் தென் இந்திய மொழிகளுக்கு இடையே காணப்படுகின்ற ஒற்றுமையையும், உறவுகளையும் ஒப்பிட்டு எழுதினார்கள். அக்காலங்களில் தமிழ் மொழியில் பெரும்பாலும் வடமொழி சொற்கள் மிகுதியாக காணப்பட்டது. அச்சொற்களை தமிழ் மொழியிலிருந்து நீக்கினாலும் தமிழ்மொழியின் தன்மை குறையாது மிக நேர்த்தியாக இருக்கும் என்பதை உலகிற்கு உரைக்கச் சொன்னவர் கனம் கால்டுவெல் அவர்கள். கனம் இராபர்ட் கால்டுவெல் ஐயரவர்களின் காலத்தில் வடமொழிகளுக்கே அதிக முக்கியத்துவம் கொடுக்கப்பட்டது. வடமொழிகளாக சமஸ்கிருதமே உயர்ந்த மொழியாக கருதப்பட்டு அது ‘தேவ பாஷை’ என்று அழைக்கப்பட்டது. வடமொழி ஆர்வலர்கள் தமிழ் மொழியினை ‘நீச்சபாஷை‘ என்று கொச்சைப்படுத்தி பிரகடணம் செய்து வந்தார்கள். அந்நேரத்தில் கனம் கால்டுவெல் ஐயரவர்கள் வெளிகொண்டுவந்த இவ்வாராய்ச்சி நூலானது தமிழர்களை உலகரங்கில் தலைநிமிரச் செய்தது.



**கனம் ஜி.யு. போப்**

ஐரோப்பா கண்டம் தமிழிக்கு கொடுத்த மற்றொரு கொடை கனம் ஜி.யு. போப் அவர்கள். கனடா தேசத்தில் பிறந்து, கிறிஸ்துவின் மீது கொண்ட அன்பினாலே கிறிஸ்தவ மிஷனெரியாக தமிழகம் வந்து சேர்ந்தார் கனம் ஜி.யு. போப் அவர்கள். நாற்பது ஆண்டுகள் இறைபணியோடு கூட சேர்ந்து தமிழுக்கும் தொண்டாற்றினார்கள். பல நல்ல தமிழ் இலக்கியங்களை உலக மக்களும் அறியக் கூடியவண்ணம் அதனை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்தார்கள். கனம் ஜி.யு. போப் ஐயரவர்கள் மொழிபெயர்த்த நூல்கள் திருக்குறள், நாலடியார், திருவாசகம் ஆகியவையாகும். அதுமட்டுமின்றி புறப்பொருள் வெண்பாமாலை, புறநானூறு, திருவருட்பயன் ஆகிய நூல்களை அனைத்து மக்களும் பயன்படுத்தும்படி அதனை பதிப்பித்தார்.



**முடிவுரை**

வெளிநாட்டில் பிறந்த மிஷனெரிகளின் தமிழ்மொழி ஆர்வம்தான் உலகரங்களில் தமிழ் மொழியினை அறிய செய்தது. தன்னகத்தே பல இனிமையினையும், சொல் வளமையினையும் கொண்ட மொழி உலகரங்களில் தொன்மை மொழியாகவும், தன்னிகற்ற மொழியாகவும் இன்றளவும் போற்றப்படுவதற்கு மிஷனெரிகள் ஆற்றிய பங்கு சொல்லிமுடியாதது.

# எட்வர்டு சார்ஜெண்ட் தமிழுக்கு ஆற்றிய பணிகள்

எட்வர்டு சார்ஜெண்ட் (Sargent, Edward) ஒரு பிரெஞ்சுப் நாட்டை சார்ந்தவர். தமிழகத்திலுள்ள திருநெல்வேலி மாவட்டத்தில் சுவிசேஷபுரத்தில் இறைப்பணியாற்றுவதற்காக வந்தவர்.

இவர் தமிழ் மொழியை நன்கறிந்தவர். எனவே தமிழில் பேச, எழுத, வாசிக்கத் தெரிந்தவர். தமிழ் மொழியை வியந்து பாராட்டியவர். தமிழிலுள்ள அழகை மகிழ்ச்சியோடு அனுபவித்தவர். பிழையில்லா மொழியில் சொற்பொழிவாற்றும் ஆற்றல் கொண்டவர். மேலும் இவ்வறிஞர் கிராமப்புற மொழியையும், பேச்சு வழக்கு மொழியையும் மிக நன்றாகவே அறிந்திருந்தார். முனைவர் கால்டுவெல் சார்ஜென்டின் அறிவுத் திறமையைக் கண்டு தமது ஆராய்ச்சிக்கு அவரது உதவியை நாடினார்.



ஹென்றி பவரின் (Henry Bower) தலைமையின் கீழ் விவிலியத்தைத் தமிழில் மொழியாக்கம் செய்யும் குழுவில் ஆலோசனை வழங்கும் நபராக இருந்தார்,

இவர் பள்ளி மாணவர்கள் தமிழை வாசிப்பதற்கென்று ஒரு நூலை 1848ஆம் ஆண்டில் எழுதி வெளியிட்டார். இதைத் தொடர்ந்து கிறித்தவத் தமிழ் இசைப்பாக்கள் அடங்கிய புத்தகத்தை 1853, 1860, 1864 ஆண்டுகளில் ரெவரெண்ட் வெப் (Webb) வெளியிட்டார். சார்ஜென்ட்இப்பாடல்களிலிருந்து 107 பாடல்களைத் தேர்ந்தெடுத்து மலிவுப் பதிப்பில் அச்சடித்து 1865இல் பாளையங்கோட்டையில் வெளியிட்டார். இவர் ஆங்கிலம், தமிழ் ஆகிய இரண்டு மொழிகளிலும் அநேக நூல்கள் எழுதியுள்ளார். இவரது படைப்புகள்

1. Tamil-Vachaka-Puttagam (Tamil reading book), 2nd ed.Madras, 1848.
2. Poorvika Charithram, Palayamkottai, 1850.

**சுஜித்**

# ஜெர்மன் மொழியில் திருக்குறளை மொழிபெயர்த்த ரெவரெட் டாக்டர் கார்ல் கிரால்

(Rev.Dr.Karl Graul) 1838-1879

ஜெர்மனி நாட்டில் சேக்சனியில் அமைந்துள்ள மீகெலன் என்னுமிடத்தில் 1838ஆம் ஆண்டு ஜனவரி முதல் நாள் கார்ல் கிரால் பிறந்தார். அவர் பள்ளி, கல்லூரிப் படிப்புகளை லீப்சிக்கில் முடித்தார். 1870இல் பாதிரியாராக அமர்த்தப்பட்டார். அதே ஆண்டு நவம்பர் மாதம் 19ஆம் தேதி இந்தியா வந்து சேர்ந்தார். 1879ஆம் ஆண்டு ஜூலை 15ஆம் தேதி தரங்கம்பாடியில் உயிர் நீத்தார்.

இவர் ஜெர்மன் மொழியில் திருக்குறளை மொழிபெயர்த்தார். ஆனால் முழுத்திருக்குறளையும் மொழிபெயர்க்குமுன் காலமானார். போப் ஐயர் இவரின் மொழிபெயர்ப்பைப் பயனுள்ள ஒன்று எனப் பாராட்டியுள்ளார்.

படைப்புகள்

1. Kural of Tiruvalluvar, High-Tamil text with Translation into Common Tamil and Latin, Notes and Glossary, Tranquebar, 1965.
2. 'Tiruvalluvar's Kural, (tr.in German) Leipzig, 1856.
3. 'The Gopuras of Tiruvannamalai," Bulletin of the Madras Museum, VII.5(1875), 161.
4. 'Refutationof Buddhist system fromthe standpoint of Saivism," Journal of the German Oriental Society, Vol.VIII, Leipzig, (1854), 720-738.
5. 'நம்பியினுடைய அகப்பொருள் விளக்கம்," Journal of the German Oriental Society, Vol.XI.(1857).
6. Indian Symbolic Plants and Flowers, characteristics of Indian and especially of Tamil Script, Erlangen, 1865.
7. Outline of Tamil Grammar, Otto Harrassowitz, Leipzig(1865), 101.
8. Kaivalyanavanitam:AVedante Poem,(The Tamil text withatranslation, a glossary and grammatical notes, to which is added an outline of Tamil grammar with specimens of Tamil Structure and Comparative tables of the fluxional system in other Dravidian Languages). Leipzig: Dorffling and Franke, 1855.

**மன்னா**

# பவர் தமிழுக்காற்றிய தொண்டு

ஜெபராஜ்

ஹென்றி பவர் (Henry Bower) 1813-1885 பிரான்சுவா பாவியர் என்னும் போர்வீரர்க்கும், இந்தியப் பெண்மணிக்கும் சென்னை சிந்தாதிரிப்பேட்டையில் திருமகனாய் ஹென்றி பவர் 1813 ஆம் ஆண்டு ஜனவரி மாதம் 13ஆம் நாள் பிறந்தார். இவர் இராணுவ ஆண்கள் அநாதையர் இல்லத்தில் (Military Male Orphan Asylum) தங்கி, அவ்வில்லம் சார்ந்த பள்ளியிலேயே கல்வி கற்றார்.

சென்னை ஆளுநர் கார்பீரேயின் உதவியால் ஹென்றி பவர் 1832ஆம் ஆண்டு இங்கிலாந்து சென்றார். அங்கு இவர் இலண்டன் வேதபோதகச் சபையில் (London Missionary Society) கிறித்தவ மதத் தொண்டராகப் பயிற்சி பெற்று 1838இல் இந்தியாவிற்குத் திரும்பி வந்தார். திருவள்ளூருக்கருகிலுள்ள திருப்பாச்சூரில் தமது மறைத்தொண்டைத் தொடங்கினார்.

அதன்பின் இவர் 1842இல் புரசைவாக்கத்திற்கு வந்து சென்னை நற்செய்தி பரப்புச் சபையில் (Society of Propagating Gospel) சேர்ந்து 1845இல் பாதிரியாராகத் திருநிலைப்படுத்தப் பட்டார். திருநெல்வேலி வேதியர்புரத்தில் குருமாணவர்களைப் பயிற்றுவிக்கும் ஆசிரியராகப் பணியாற்றினார். 1864ஆம் ஆண்டு அப்பணியை விட்டுப் பிரிந்து வேப்பேரியில் பவுல் ஆலயப் பாதிரியாரானார்.

இவரது தலைமையில் தமிழ் விவிலிய மொழிபெயர்ப்பு திருத்தக் குழு 1858இல் அமைக்கப்பட்டது. இம்மொழியாக்கம் முடிந்தபின்னர் இங்கிலாந்து நாட்டுத் திருச்சபையின் (Church of England) ஜெபப் புத்தகத்தைத் திருத்துவதற்காக நியமிக்கப்பட்ட குழுவில் ஓர் உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். 1877இல் கான்டர்பரி திருச்சபைப் பேராயர் இவருக்கு இறையியல் முனைவர் (Doctor of Divinity) என்ற பட்டத்தைக் கொடுத்துச் சிறப்பித்தார். 1871ஆம் ஆண்டு சென்னைப் பல்கலைக் கழகத்தின் ஆளவை உறுப்பினரானார். 1872இல் இவர் திருச்சிக்குச் சென்றார். இதன் பின்னர்ச் சென்னை, வேப்பேரி, சாந்தோம் ஆகிய இடங்களில் ஆலயக் குருவாகப் பணியாற்றினார்.

பவரின் இறைவழிபாடுகள், சடங்காசாரங்களின்றி எளிமையாக இருக்கும் எனக் கூறப்படுகிறது. இவரோ ஆங்கிலத்தைவிடத் தமிழிலேயே பணிபுரிய ஆசித்தார். இவருடைய தமிழ்ப் புலமையினை அவரது பிள்ளைகளும் பெற்றிருந்தனர். அவர்களுள் ஒருவர் ஆக்ஸ்போர்டு பல்கலைக் கழகத்தில் சட்டம் பயின்று இந்திய நாட்டு மக்கள் சபைப் பிரதிநிதியாகச் சென்றார். மேலும் அவருடைய மகள் ஒருவர் சென்னையில் கல்வி இயக்குநராகப் (Director of Education, Madras) பணியாற்றினார் என்றும் கூறப்படுகிறது.

பவர் ஒரு பன்மொழி அறிஞர், ஆங்கிலம் மட்டுமின்றிக் கிரேக்கம், இலத்தீன், பிரெஞ்சு, சமஸ்கிருதம், தமிழ், கன்னடம், இந்துஸ்தானி ஆகிய மொழிகளையும் நன்கு அறிந்தவர். சமணப் புலவரான சாத்திரம் ஐயர் என்பவரிடம் தமிழ் பயின்றார்.

இவர் தமிழுக்குப் பெரும்பணியாற்றியுள்ளார். ‘திருக்குறள்’, ‘சீவகசிந்தாமணி’ போன்ற இலக்கியங்களிலும், ‘நன்னூல்’ என்ற இலக்கண நூலிலும் இவர் ஈடுபாடு கொண்டிருந்தார். இவர் பல நூல்கள் மொழி பெயர்த்துள்ளார். அவற்றுள் ‘அகராதி’, கிறித்தவ சமயம் சார்ந்த நூல்கள், சமூகச் சிந்தனை சார்ந்த நூல்கள், மற்றும் மொழிபெயர்ப்பு நூல்களும் அடங்குகின்றன.

1841இல் பவர் குறிப்பிடத்தக்க பழைய அச்சு நூல்களைத் தொகுத்து ‘வேத அகராதி’ என்ற தலைப்பில் எழுதியுள்ளார். ஐம்பெருங்காப்பியங்களில் ஒன்றான சீவக சிந்தாமணியில் ‘நாமகள்’ இலம்பகத்திற்கு இவர் தமிழுடன் ஆங்கில உரை எழுதியதுடன் சமணக் கருத்துக்களையும் விளக்கி எழுதியுள்ளார்.



பவர் தமிழுக்காற்றிய தொண்டு

1. வேத அகராதி (1841)- இது விவிலிய இறையியல் அகராதியாகும்.
2. விவிலிய மற்றும் தத்துவச் சொற்கள் இதில் அடங்கியுள்ளன.
3. நியாயப் பிரமாண விளக்கம் (1847).
4. விசுவாசப் பிரமாண விளக்கம் (1851).
5. இந்து மதத்திற்கும் பாப்பு மதத்திற்கும் இருக்கிற சம்பந்த விளக்கம் (1851).
6. பதமஞ்சரி (1852).
7. நன்னூல், பகவத்கீதை- ஆங்கில மொழிபெயர்ப்புகள் (1855).
8. சாதி வித்தியாச விளக்கம்- இந்து மதச் சாதிகளைப் பற்றிய விளக்க நூல், இது ஆங்கிலத்தில் எழுதப்பட்டது (1857).
9. தர்ம சாத்திர சாரம் (1857).
10. சீவக சிந்தாமணி-நாமகள் இலம்பக உரை (1868).
11. பிரசங்க ரத்தினாவளி (1875).
12. கிறித்தவ மார்க்கம்-இந்து தேசத்தில் விருத்தியான சரித்திரம் (1879),

மேலும் சமயங்களின் ஒப்பீடு (Comparative Religion), தர்க்க சாஸ்திரம், மொழியியல் முதலிய துறைகளில் இவர் கட்டுரைகள் எழுதியுள்ளார்.

# தமிழுக்கு தொண்டு செய்த ஐரோப்பியக் கிறித்தவர் சமயச் சான்றோர்

**ஆல்வின்**

ஐரோப்பியக் கிறித்தவர் பணியை மொழி பெயர்ப்பு, உரைக் குறிப்பு, தொகுப்பு முயற்சி, மொழி நூல், அகராதி, சிறுகதை, உரைநடை,கவிதை என வகைபடுத்தலாம்.

கி.பி. 1498 தொடங்கி 1947 வரை, ஐரோப்பியர் இங்கே இருந்த ஆண்டுகள் 449 ஆண்டுகள். கிட்டத் தட்ட இந்த 449 ஆண்டுகளில் தமிழகம் வந்து போந்த அருளாளர் எண்ணிக்கை குறைந்தபட்சம் 2000 பேர்களாவது இருக்கலாம். வந்து திரும்பிய ஐரோப்பிய அதிகாரிகளின் எண்ணிக்கை குறைந்தது 25,000 ஆவது இருக்கலாம். 2,000 சமய அருளாளர்களின் 23 பேர் ஆற்றிய பணி; 25,000 அதிகாரிகளில் ஐந்து பேர் ஆற்றிய பணி மகத்தானது.

அவர்கள் ஆற்றிய பணிகளுள் மிக மகத்தானதும் பெரிதானதும், மதப்பணியும், ஆட்சிப் பணியுமே. எனவே ஐரோப்பியக் கிருத்தவர் பணி என்பதை விட ஐரோப்பியச் சமய அருளாளர் தமிழ்ப்பணி என்பதே சரியான மதிப்பீடு. பாதிரிமார் பணி என்பதால் சமயச் சாயல் பெற்றே பெரும்பாலானவை செய்யப்பட்டன என்பதில் வியப்பு இருப்பதற்கு இல்லை.

தமிழ்மொழி, இலக்கியப் பணிக்கு அப்பால் பெரும் திருப்பத்தைச் சாதனையைத் தமிழரிடையே ஐரோப்பியக் கிறித்தவர் ஆற்றினமையைச் சுட்டிக் காட்டவேண்டும்.

வேத சமஸ்கிருதமே, தமிழுக்குத் தாய்மொழி என்று பொரும்பாலான தமிழர் கொண்டிருந்த மனப்பான்மையையும், நாகரிகம், பண்பாடு வேத ஆரியரைச் சார்ந்தே தமக்குக் கிடைத்தன என்ற தமிழர் நம்பிக்கையையும், இவற்றால் அவரிடம் ஏற்பட்டுக் கிட்டத்தட்ட நிலை பெற்றிருந்த தாழ்வுணர்ச்சியையும் அடியோடு தகர்த்த பெருமை டாக்டர் கால்டுவெல், எட்கர் தர்ஸ்டன், ஜான் மார்சல் ஆகியவர் தம் படைப்புகளுக்கு உண்டு. கால்டுவெலின் மொழியாய்வு, தமிழின் தனித்தன்மையை எடுத்துக் காட்டியது. தர்ஸ்டனின் தென்னிந்தியக் குல ஆய்வு, தமிழர், திராவிடர் தனிப் பண்பாட்டினர் என்று எடுத்துரைத்தது, ஜான் மார்சலின் சிந்து வெளி அகழ்வாய்வு. தமிழ்த் திராவிடர்க்குப் பண்டைய நாகரிகத்தில் இருந்த பங்கை எடுத்து மொழிந்தது. இவற்றில் தமிழர், தாழ்வுணர்வு நீங்கி, வாழ்வுணர்வு பெற வழியேற்பட்டது என்பதில் கிஞ்சித்தும் ஐயமில்லை. தமிழ்மொழி வரலாற்றிலும், இன தமிழ் வரலாற்றிலும் தமிழ் நாட்டு வரலாற்றிலும் மேற்கண்ட மூவரின் ஆய்வு ஒரு பெரிய திருப்பு முனையை ஏற்படுத்தியது.

தமிழ் வரலாற்றில், தமிழர் இன வரலாற்றில் தமிழ் நாட்டு வரலாற்றில், ஐரோப்பியக் கிறித்தவராகிய

கால்டுவெல், தர்ஸ்டன், மார்சல்

மூவருமே மகத்தான சாதனை புரிந்த மகத்தானவர்கள்!

கால்டுவெல் ஒப்பிலக்கணம் வெளிவருகிறவரை இந்திய மொழிகள் அனைத்தும் சமற்கிருத வழி பிறந்தவை என்ற கருத்தே மேலோங்கி இருந்தது. தமிழறிஞரே தமிழ் மொழி வடமொழிச் சார்பால்தான் வாழ்கிறது என்று நம்பினர். இலக்கணக் கொத்தை எழுதிய சுவாமிநாத தேசிகர் இக் கருத்தை வெளிப்படையாகவே எழுதியுள்ளார். இந்நிலையில், தமிழ் மற்ற சமஸ்கிருதத்தினின்று எப்படி வேறுபட்டு நிற்கிறது. ஏனைய திராவிட மொழிகளிலிருந்து தமிழ் எவ்வாறு தனித்து உயர்ந்து நிற்கிறது என்பதை நடுநிலையோடு தக்க சான்றுகள் காட்டி முதல் முதல் நிறுவிய பெருமை அறிஞர் கால்டுவெலையே சேரும். மொழி அளவில் உறக்கம் நீங்கி, விழிப்பைப் பெற அவரே மூலகாரணர், கால்டுவெலின் மொழியாராய்ச்சி, மொழித்துறையில் மட்டுமன்றி, தமிழர் தம் அரசியல், சமுதாய வரலாற்றில், பிற்காலத்தில் பெருமாற்றம் உருவாக ஒரு பெருங்காரணமா இருந்தது. பின்னே நிமிர்ந்து முழங்கிப் புறப்பட்ட திராவிட இயக்கங்களுக்கு உறுதுணை உரம், வீரிய விதை கால்டுவெலின் ஒப்பிலக்கணமே.

ஆதி ஐரோப்பியர் குறிப்புகளில், இந்தியர் போதிய பண்பாடு நாகரிகம் வாய்க்கப் பெற்றிராத மக்கள் என்றே பலரால் குறிக்கப்பட்டனர். குறிப்பாகப் போர்ச்சுக்கீசியர் இந்தியரைப் பெரிதாகக் கருதவில்லை. இந்தக் கருத்தை முதலாவதாக, முற்று முழுவதுமாக மாற்றியது. அருள் திரு. ஈராசு அடிகளார் தம் சிந்துவெளி மொழியாய்வாகும். ஜான் மார்சலின், சிந்து வெளிக் கண்டுபிடிப்பு, இந்திய வரலாற்றில் ஒரு பெரும் திருப்புமுனை, ஈராசு அடிகளார் தம் ஆய்வு பிறிதொரு திருப்புமுனையாகும். சிந்துவெளி எழுத்துகள், தமிழோடு தொடர்புடையன என்பதைப் பல்லாண்டு ஆராய்ச்சி வழி, ஈராசு அடிகள் தம் பெரும் ஆய்வு நூல்வழி காட்டினர். ஈராசு அடிகளாருக்குப் பின் சிந்துவெளி மொழியாய்வுகள் பல நிகழ்ந்தன. நிகழ்ந்து, கொண்டிருக்கின்றன, எனினும், சோவியத், பின்னிசு, அமெரிக்க அறிஞர்கள, பல வேறு ஆய்விற்குப் பின்னும் சிந்துவெளி மொழியை பழந்திராவிடத்தோடு (ProtoDravidian) தொடர்புறுத்துகின்றனர். அணமையில் கீழ் வரிசையில் கண்டறியப்பட்ட பட எழுத்துகளும் சிந்து வெளி மக்களுக்கும் தமிழ் மொழிக்கும் இடையே இருந்த இணைப்பை உறுதி செய்கிறது.

அரசியல், சமயம், வணிகம் என்பன ஐரோப்பியக் கிறித்தவ வரவிற்குக் காரணங்கள் எனினும், சமயநெறி பரப்ப வந்த கிறித்தவச் சான்றோர்களால், தமிழ் மொழி பெற்றவை, தமிழ் இன வரலாறு பெற்றவை, தமிழ் நாட்டு வரலாறு பெற்றவை, தமிழர் கட்சிக்காகப் பெற்றவை எண்ணி அடங்கா; எண்ண அடங்கா. இந்தியா என்றால் சமஸ்கிருதந்தான் என்ற நிலைமை ஓரளவு மாற்றி, இந்தியா என்றால் அதன் மூல மொழி தமிழ், இந்திய மண்ணிற்கே உரிய தொன்மை மொழி தமிழ், இந்திய மண்ணின் தொல்பழம் மாந்தர் திராவிடர் என்று, இந்த மண்ணிலும், வெளிநாட்டு மண்ணிலும் ஓரளவு நிலை நாட்டியவர் ஐரோப்பியக் கிறித்தவர் சமயச் சான்றோரே ஆவர்.

# வெள்ளைத் தமிழர்

# பாப்லி

ரமேஷ்




பிரிட்டிஷ் பாதிரியாரான பாப்லி தமிழகம் வந்து திருப்பத்தூரில் மறைப்பணியாற்றினார். இவர் ஒரு தமிழ்ப்பள்ளி நடத்தி அதில் தமிழ் ஆசிரியராக மாணவர்களுக்குக் கற்பித்தார். மேலும் இவர் தாம் நிறுவிய பள்ளியில் உணவு உறைவிட விடுதி ஏற்படுத்தி அதன் பாதுகாவலராகவும் இருந்து நல்ல முறையில் பணியாற்றினார்.

பாப்லி 360 குறள்பாக்களைத் திருக்குறளிலிருந்து தேர்ந்தெடுத்து ஆங்கிலத்தில் செய்யுள் வடிவில் மொழியாக்கம் செய்துள்ளார். மக்கள் திருக்குறளைப் பற்றி மிக உயர்வாகப் பேசுகின்றனர். ஆனால் இம்மக்கள் திருக்குறளிலுள்ள கருத்துக்களையும், நோக்கங்களையும் மும்முரமாய் வாசிப்பதில் ஈடுபாடு கொள்வதில்லை என்னும் கருத்தை நூலின் முகவுரையில் கூறியுள்ளார். மாணிக்கவாசகரின் திருவம்மானையையும், திருக்காவலையும் அவற்றைப்பற்றிய தமிழ்ப் பொருள் விளக்கத்தோடு வெளியிட்டுள்ளார்.

பாப்லி சிவஞானபோதம், திருவருள்பயன், சிவஞான சித்தியார் மற்றும் சைவ சமய இலக்கியத்தைப் படிப்பதில் ஈடுபாடு கொண்டிருந்தார். சத்சமய விளக்கம் என்னும் ஒரு நூலைத் தொகுத்து அதைச் சென்னையில் 1915ஆம் ஆண்டு வெளியிட்டார். இந்நூல் குறள், நாலடியார், நன்னெறி, மூதுரை, நீதிநெறிவிளக்கம் ஆகியவற்றை அடக்கியுள்ளது.

மேலும் இவர் அப்பரும் அவரது சமயப்பணியும் என்பது பற்றி ஆங்கிலத்தில் கட்டுரை எழுதி 'Young Men of India' என்ற இதழில் 1923ஆம் ஆண்டு வெளியிட்டுள்ளார்.

இவர் தமிழ்க் கீர்த்தனைகளை அடிப்படையாகக் கொண்டு கிறித்தவ சமயக் கீர்த்தனைப்பாக்கள் புனைந்துள்ளார். இவை 1921ஆம் ஆண்டு வெளியிடப்பட்டன. தமிழ்ச் சங்கீதத்தைப் பற்றிய விரிவான செய்திகள் இந்நூலின் எட்டுப் பக்கங்களில் உள்ளன.



**திருநெல்வேலி கிறிஸ்தவ வரலாற்றுச் சங்கத்தின் அன்பின் வாழ்த்துக்கள்.**

பூர்வ நாட்களை நினை; தலைமுறை தலைமுறையாய்ச் சென்ற வருஷங்களைக் கவனித்துப்பார்; உன் தகப்பனைக் கேள், அவன் உனக்கு அறிவிப்பான்; உன் மூப்பர்களைக் கேள், அவர்கள் உனக்குச் சொல்லுவார்கள். (உபாகமம் 32:7)

மோசே இஸ்ரவேல் ஜனங்களிடம் கூறும் போது **'பூர்வநாட்களை நினை; தலைமுறை தலைமுறையாய்ச் சென்ற வருஷங்களைக் கவனித்துப்பார்'** என்று கூறுகிறார். வரலாற்றின் பக்கங்களை நாம் திரும்பி பார்க்கும் போது, அநேக அனுபவங்களையும், பாடங்களையும் அவை நமக்கு கற்றுக் கொடுக்கின்றன.

பாதை தெரியாத நிலையில் இருக்கும் போது வரலாற்று சம்பவங்கள் நமக்கான பாதைகளை நமக்கு காட்டுகின்றன. (முன் நடந்ததே இப்பொழுதும் நடக்கிறது; இனி நடக்கப்போகிறதும் முன்னமே நடந்தது. (பிரசங்கி 3:15))

ஒவ்வொரு காலகட்டத்திலும் பல்வேறு வரலாற்று அறிஞர்கள் வரலாற்றை அதிக தியாகத்தோடும் அர்பணிப்போடும் தம் அடுத்த தலைமுறைக்கு மிகச் சிறந்த வழிகாட்டியாகவும் பொக்கிஷமாகவும் கொடுத்துள்ளனர். அதை போற்றுவதும் நம் அடுத்த தலைமுறையினருக்கு கொண்டு செல்வதும் நம் மேல் விழுந்த தலையாய கடமையாகும். அந்த அளப்பரிய பணியை செய்ய அர்பணிக்கப்பட்ட இயக்கங்களுள் திருநெல்வேலி **கிறிஸ்தவ வரலாற்றுச் சங்கமும்** ஒன்று.

திருநெல்வேலி **கிறிஸ்தவ வரலாற்றுச் சங்கம்** தமிழ் கிறிஸ்தவ வரலாற்று ஆய்வாளர்கள் பலரின் அரும் பெரும் முயற்சியினால் தொடங்கப்பட்டது. நம்முடைய வரலாற்று சங்கத்தின் தரிசனத்தில், இறையியல் கல்லூரி மாணவர்கள் பலர் தன்னார்வத்தோடு தங்களையும் இணைத்து செயல்பட்டு வருகிறார்கள். மேலும் தமிழ்நாடு முழுவதும் உள்ள பல வரலாற்று ஆய்வாளர்களுடன் கைகோர்த்து இப்பணியைச் செய்து வருகின்றோம்.

ஒவ்வொரு காலகட்டத்திலும் ஆண்டவர் வரலாற்று காரியங்களைப் பதிவு செய்வதில் தமக்கு ஏற்ற இறைமக்களைப் பயன்படுத்துகிறார். வரலாற்றைப் பதிவு செய்வதில் பழைய ஏற்பாட்டில் மோசே, யோசுவா, எஸ்றா ஆகியோரையும் புதிய ஏற்பாட்டில் நற்செய்தியாளர்கள் மத்தேயு, மாற்கு, லூக்கா, யோவான், பேதுரு, பவுல் ஆகியோரையும் அதிகமாக பயன்படுத்தி உள்ளதை நாம் பார்க்கிறோம்.

கிறிஸ்தவ வரலாற்றை பதிவு செய்யும் இறைபணியில் நம்முடைய திருநெல்வேலி கிறிஸ்தவ வரலாற்றுச் சங்கத்தையும் இறைவன் பயன்படுத்தவதை எண்ணி இறைவனுக்கு நன்றி செலுத்துகின்றோம்.

**நம் திருநெல்வேலி கிறிஸ்தவ வரலாற்று சங்கத்தின் பத்து அம்ச செயல்திட்டத்தை நினைவுபடுத்துவதில் மகிழ்ச்சி அடைகின்றோம்.**

- தமிழ் கிறிஸ்தவ வரலாற்றில் நீண்ட இடைவெளிக்கு பின்பு மீண்டும் ஒரு வரலாறு படைத்துத்துக் கொண்டு இருக்கும் மாத ஆய்விதழ் தான் **'கிறிஸ்தவ வரலாற்றுச் சுவடுகள்'**. கடந்த 2020ம் ஆண்டு ஜீன் மாதம் முதல் ஒவ்வொரு மாதமும் ஒவ்வொரு தலைப்பைக் கொண்டு பல்வேறு அரிய ஆய்வுக்கட்டுரைகளோடு மிக சிறப்பாக வெளி வந்து கொண்டிருக்கிறது. **மறைக்கப்பட்ட, மறந்த, மறைந்த** மிஷனரிகள் மற்றும் திருச்சபை வரலாறுகள், கள ஆய்வுகள், பல்வேறு அரிய வரலாற்று பொக்கிஷங்களுடன் தமிழகம் முழுவதும் தொடர்ந்து 1500 க்கு மேற்பட்டவாசகர்களுடன் வந்து கொண்டு இருக்கின்றது.
- காலவோட்டத்தில் அறுபட்டுக்கிடந்த இசைத் தமிழ் கண்ணிகளைத் தற்கால இசைத் தமிழ் உலகுக்குக் கோர்த்துக் கொடுத்த மாபெரும் இசைத் தமிழ் அறிஞர் தஞ்சை ஆபிரகாம் பண்டிதர் அவருடைய அளப்பரிய செயல்களை நினைவுகூறும் வகையில் **ஆபிரகாம் பண்டிதர் நினைவு மின்னனு ஆராய்ச்சி நூலகம்** நம்முடைய சங்கத்தின் சார்பில் ஏற்படுத்தப்படுள்ளது. ஆபிரகாம் பண்டிதர் நினைவு ஆராய்ச்சி நூலகமானது தமிழ் கிறிஸ்தவ மின்னனு நூலகத்தில் **முதல் நூலகம்** என்ற சிறப்பைப் பெற்றது. இந்த நூலகமானது தமிழ் கிறிஸ்தவ வரலாற்று ஆய்வாளர்களுக்கும், எழுத்தாளர்களுக்கும், தமிழ் கிறிஸ்தவ ஆராய்ச்சி மாணவர்களுக்கும் பயன்படும் வகையில் அமைக்கப்பட்டுள்ளது. தமிழ் கிறிஸ்தவ வரலாற்றில் ஒரு புதிய மைல்கல்லாகவும் அமையும். மேலும் அநேக புதிய தமிழ் கிறிஸ்தவ எழுத்தாளர்களை உருவாக்கவும், ஆராய்ச்சியாளர்களை உருவாக்கவும் இது உதவியாக இருக்கும் என்பதில் எவ்வித ஐயமுமில்லை.
- வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த, மறுபதிப்பு செய்து வெளியிடப்படாத கிறிஸ்தவ மிஷனரிகளின் வாழ்க்கை வரலாறு புத்தகங்களை மறுபதிப்பு செய்து வருகின்றோம். குறிப்பாக நெல்லை திருமண்டல வரலாற்று அறிஞர் பேராசிரியர் அருள்திரு தே.அ. கிறிஸ்துதாஸ் ஐயர் அவர்களுடைய படைப்புகளை மறுபதிப்பு செய்து இன்றைய தலைமுறைகளுக்கு கொண்டு செல்லவும் முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டு வருகின்றோம். குறிப்பாக கடந்த ஆண்டு பேராசிரியர் அருள்திரு தே.அ. கிறிஸ்துதாஸ் ஐயர் அவர்களின் வரலாற்று சிறப்புமிக்க புத்தகம் அனைத்தையும் மறுபதிப்பு செய்து வருகின்றோம்.

- நம்முடைய வரலாற்று சங்கமும் கிறிஸ்தவ ஆய்வு மற்றும் ஆவணப்படுத்து மையமும் இணைந்து **'புத்தக வனம்'** செயலி செயல்பட்டுக் கொண்டு இருக்கின்றது. இந்த செயலி தமிழகத்தில் முதல் முறையாக டிஜிட்டல் முறையில் கையடக்க வடிவில் புத்தகமாக முழு நூலகமாக உங்கள் கைகளில் கொடுத்துள்ளோம். இன்னும் பல ஆயிரம் புத்தகங்களை பதிவேற்றும் பணி நடைபெற்றுக் கொண்டிருக்கின்றது. மேலும் பேராசிரியர் அருள்திரு தே.அ. கிறிஸ்துதாஸ் ஐயர் பெயரிலேயே **நினைவு புத்தக அங்காடி** ஒன்று ஏற்படுத்தப்பட்டுள்ளது.
- தமிழக வரலாற்றில் கிறிஸ்தவ மிஷனரிகளுடைய பங்கு குறிப்பிடத்தக்கது. அந்த மிஷனரிகள் பணி செய்த இடங்கள், அவர்களுடைய நினைவிடங்கள், தங்கியிருந்த இல்லங்கள், கல்லறைகள், வரலாற்று சிறப்புமிக்க ஆலயங்கள், இரத்த சாட்சிகளாக மரித்த மிஷனரிகள் பணி செய்த மற்றும் தங்களை இரத்த சாட்சியாக ஒப்புக்கொடுத்த இடங்களை தெளிவான முறையில் பார்வையிடவும், வெளியிடங்களிலிருந்து வரும் மக்களின் வசதிக்காகவும் **Mission Tourist Map** என்று செயலி உருவாக்கி அதன் மூலம் அவர்கள் தங்குமிடங்கள், வழித்தடங்கள் அடங்கிய மின்னியல் கையேடு அமைப்பது.
- வரலாற்றின் பக்கங்களில் மறைந்து கிடக்கும் கீர்த்தனை கவிஞர்கள், உபதேசிமார்கள், முன்னாள் குருமார்களுடைய வரலாற்று பொக்கிஷங்களை சேகரித்து வருகிறோம். மேலும் அவர்களுடைய வரலாற்று தகவல்கள், அவர்களால் உருவாக்கப்பட்ட திருச்சபைகள், கிறிஸ்தவ பாடல்கள் உருவாக்கம் பெற்ற வரலாறுகள், பாடல்களின் வரலாறுகளையும் சேகரித்து அதை மின்னியல் முறைக்கு மாற்றும் பணிகளையும் செய்து கொண்டு இருக்கின்றோம்.
- தமிழ் கிறிஸ்தவ பழைய புத்தகங்களை சேகரித்து மின்னியல் முறையில் ஆபிரகாம் பண்டிதர் நினைவு ஆராய்ச்சி நூலகத்திலும், பேராசிரியர் அருள்திரு தே.அ. கிறிஸ்துதாஸ் ஐயர் நினைவு புத்தக அங்காடியிலும் பதிவேற்றம் செய்வதுடன் புத்தகங்களை தமிழ் கிறிஸ்தவ வரலாற்று ஆய்வாளர்களுக்கும், எழுத்தாளர்களுக்கும், ஆராய்ச்சி மாணவர்களுக்கும் பயன்படும் விதமாக ஒரு சிறந்த ஆய்வு நூலகம் அமைக்கவும் முயற்சிகளும் மேற்கொண்டு வருகிறோம்.
- மிஷனரிகளின் வாழ்க்கை வரலாற்று சம்பவங்களை அடிப்படையாக கொண்டு ஆவணப்படங்களை வெளியிடுவதற்கான முயற்சிகள் செய்து கொண்டு இருக்கிறோம். கர்த்தருக்கு சித்தமானால், வருகிற ஆண்டு ஒரு மிஷனரியின் வரலாற்றை ஆவணப்படமாக்க திட்டமிட்டிருக்கிறோம்.
- தங்களுடைய வசதியான வாழ்வை தியாகம் செய்து நம் நாட்டிற்கு வந்து கோதுமை மணிகளாய் விதைக்கப்பட்ட மிஷனரிகள் மற்றும் தன் சொந்த மக்களுக்காக தங்களையே அர்ப்பணித்த நம் இந்திய மிஷனரிகளின் நினைவிடங்கள் மற்றும் கல்லறைகளை கண்டறிவதுடன் திருச்சபையுடன் இணைந்து பராமரித்து அவர்களுடைய தியாகங்களை குறித்த விழிப்புணர்வை திருச்சபை மக்களுக்கு ஏற்படுத்த பணியாற்றி வருகிறோம்.
- வரலாற்று சங்கம் சார்பில் மிஷனரிகள் பயன்படுத்திய கலை பொருட்கள் மற்றும் புத்தகங்கள், பைபிள், சேகரித்து வரலாற்று **அருங்காட்சியகம்** அமைக்கும் பணியில் ஈடுபட்டிருக்கிறோம். மிஷனரிகள் பயன்படுத்திய பொருட்களை சேகரித்து வருகிறோம்.
- திருநெல்வேலி கிறிஸ்தவ வரலாற்று சங்கம் சார்பாக வரலாற்று **ஆய்வுக் கருத்தரங்கம்** நடத்துவது வரலாற்று கள ஆய்வு பயிற்சிக்கான Workshop நடத்தும் பணிகளை மேற்கொண்டு வருகிறோம். அதற்கான ஆயத்தப்பணிகள் நடந்துகொண்டிருக்கிறது.

கிறிஸ்துவுக்குள் பிரியமானவர்களே, கடந்த 2017ம் ஆண்டு அற்பமாக ஆரம்பிக்கப்பட்ட நம்முடைய திருநெல்வேலி **கிறிஸ்தவ வரலாற்றுச் சங்கம்** இது வரையிலும் பல்வேறு தடைகளையும், நெருக்கடிகளையும் கடந்து வந்திருக்கிறது. வரலாற்று ஆய்வாளர்கள், ஆசிரியர்கள், வாசகர்கள், நண்பர்கள், நலன்விரும்பிகள் ஆகியோருடைய இடைவிடா ஜெபத்தாலும், ஆதரவாலும், உதவியாலும் நம் திருநெல்வேலி கிறிஸ்தவ வரலாற்று சங்கம் தொடர்ந்து செயல்பட்டு வருகிறது. மேலும் நம்முடைய மாதாந்திர ஆய்விதழும் தடைகளின்றி வெளி வருகிறது. நம்முடைய கிறிஸ்தவ வரலாற்று சங்க செயல்பாடுகள் சிறப்பாக அமைய ஜெபத்தாலும், உடலுழைப்பாலும், பொருளாதார வழியிலும் உதவி வரும் அத்துணை நல்லுல்லங்களுக்கும் நன்றியினை தெரிவித்துக் கொள்கிறோம். தொடர்ந்து நாம் செயல்பட வேண்டிய தளங்கள் அநேகமுண்டு. இணைந்து செயல்பட அன்புடன் அழைக்கிறோம். வரலாற்று சங்கத்தின் ஓர் அங்கமாக வரலாற்றை அடுத்த தலைமுறைக்கு கொண்டு செல்லும் கருவியாவோம். சர்வ வல்லமை கொண்ட ஆண்டவரின் ஆயுதமாவோம்.

Federal Bank
Tinnevelly Christian Historical Society
Account number : 17480200003684
IFSC Code : FDRL0001748

christianhistorical@gmail.com

**சங்கத்தில் உறுப்பினராக இணைய**
**91767 80001**

christianhistoricalsociety.in/
**tchsportal.co.in**